உ

சிவமயம்

திருமந்திரநகரமாகிய

தூற்றுக்குடியிலெழுந்தருளியிராநின்ற

# பாகம்பிரியாவம்மை

## பிள்ளைத்தமிழ்.

இஃது

புலவர்குலதிலகராகிய

ஷையூர்

வரகவி

வீரபாண்டியப்புலவரென்றுபெயர்விளங்கிய

**சங்கரமூர்த்திப்புலவரவர்களால்**

இயற்றியது.

ம-ள-ள-ஸ்ரீ

சுப்பராயபிள்ளையவர்கள்வேண்டுகைக்கிணங்கி

தூற்றுக்குடிப் பாடகசாலைமுனிஷி ம-ள-ள-ஸ்ரீ

**ஆ-குமாரசுவாமியாபிள்ளையவர்கள்**

முன்னிலையிற்பரிசோதித்து

திருநெல்வேலி

அம்பலவாணன்கவிராஜரவர்கள்.

ஆர். சோமசுந்தரமுதலியாரவர்கள்.

புதூர். வள்ளிநாயகம்பிள்ளையவர்கள்

இவர்களது

முத்தமிழாகர அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கலாயிற்று.

ஈசுவர ௵ மகரரவி.

உ.

சிவமயம்.

# பாகம்பிரியாவம்மை

# பிள்ளைத்தமிழ்,

## காப்புப்பருவம்.

### திருமால்.

கார்கொண்டகன்றுகன்னங்கறேலென்னத்திரண்டுசுருண்டகுழற் *
காடுந்திலகபங்கயமுங்கொப்புங்குழையுங்கழுநீரும்
பார்கொண்டலராக்குமிழ்தளவாம்பலும்பூத்துளம்பூத்தலர்ந்துபச்சைப் *
பசேலென்றிருந்தகற்பகப்பூம்பாகம்பிரியாடனைக்காக்க *
பேர்கொண்டிருந்தவகலிகைகல்லுருவாக்குபையதாமரையும் *
பிரமன்செனித்ததாமரையும்பின்னைப்பிராட்டிதாமரையுஞ் *
சீர்கொண்டிருந்தநயனமெனச்செக்கச்சிவந்ததாமரையுஞ் *
செங்கைப்பதுவத்தாமரையுஞ்செழித்தசொரூபக்கரும்புயலே. (க)

---

## பன்னிருபாட்டியல்.

திருமாலரனேதிசைமுகன்கரிமுகன், றொருவேன்முருகன்பரிதிவடுகன் *
எழுவகைமங்கையரிந்திரன்சாத்தன், நிதியளகீசபதிநொருமூலர் *
திருமகள்திருமதியென்றிவரெல்லாம், மருவியகாப்பினுள்வருங்கடவுளரே

எ-ம் அவருள் காப்பினமுதலெடுக்குங்கடவுடானே, பூப்புனைதுழாய்முடி-புனைந்தோனாகும் எ-ம் அவன்றான் காவற்கிழவனாகலானும், முடியுஞ்சடைகமுமொய்பூந்தாருங், குழையுநாலுக்குருமணிப்பூணும், மணியுஞ்செயமலாகலானும், மூன்றுறமொழிதற்குரியனென்ப.

## சங்கரராமீசுரர்-சந்தம்.

மந்திரவாழ்வானவர் வடதிக்கிருப்பவர் வங்கணராலாசனகனகச்சதுர்ப்புய மந்தரரோறேறியவனிச்சிறப்பினர் மன்றினில்வாதாடியசிரமப்பதத்தினர் சந்திரகலாமாலையர்கயிலைப்பொருப்பினர் தண்கொழுடாகீரதிதலைவைத்திருப்பவர், சங்கொருகாதாடிட விசையைத்தரிப்பவர் சங்கராமீசுரரிசையைப் பழிச்சுது, மூர்க்கியவேதாகமக்கவுணியக்குலப்பயிர்முன் § பதினாறுயிரமதுரத்திருக்கடை, முண்டகவேதாமறை யெனவுச்சரிதது முரண்சமூமேலேறிடவமணைச்செயித்தருள், பைந்தமிழாகாரசண்முகனுக்கிதசதொடு பைந்தனமீதூறியவமுதைப்புகட்டிய, பைங்கொடியாள்பாகமினிசையைப் படிப்படி பண்புடனேபாடுமிப்பனுவற்றழைக்கவே. (உ)

## சுந்தரபாண்டியப்பிள்ளையார்-சந்தம்.

கொந்தவிழ்பூகதொடைப்பரளைக்கவளக் கொழுங்கனிதாங்குகைத்தலனைத்திகமொரு, கொம்பினையூன்றுகைத்தலனைக்கயிறு கொடும்புரிபூண்டகைத்தலனைப்பருமித, தொந்தியுலாந்துகைத்தலனைப்பிரபை தொகங்குசமேந்துகைத்தலனைக்கவுண்மத, தும்பிமுகாய்ப்புயத்தரசைக்கருணைசெய் சுந்தரபாண்டியச்சுட்டைத்துதிசெய்வாம், மந்திரபூந்திருப்பதியிற்சரவண மைந்தனையீன்றிடப்பருவக்குளிர்பனி, மஞ்சமர்காஞ்சனத்திமையக்கிரிதரு மங்கலநாண்கழுத்தமுதக்களிமயில். சந்திரகாந்தியிற்கதிர்விட்டிள்வெயி றங்கொளிகான்றபொற்பரசுக்கரதல, சங்கணிபூங்குழைக்கருணைபொருந்திய சங்கரர்தோய்ந்தவுத்தமியைப்புகழுவே. (௩)

## முருகக்கடவுள்-சந்தம்.

மகாமெரிகிளைகதறுகடலிடைகவடுபடுசினைசெல்லகட்சேத்திர,மலர்வதெனமலர்மலருமலர்தலைகவிழமரமரமல்லகிர்ப்பாக்கிய, மரமிதெனவரிபிரமர்முதலியர்பிரமைகொளவரும்வல்லமைச்சூர்க்குல, மறுகமகபதிகிருபை

---

§ பதினாறுயிரமதுரத்திருக்கடையென்பது—பதினாறுயிரந்திருக்கூட்டம்.

பெறவிமையவர்கணிலைபெறவெள்ளிவெற்† பாற்பதா,குகாருகாமுறூடை
யபொருளெனமதுடகணபணகல்லுதிர்த்தாச்சிரம, கொடியவுரகமுமுடல
நெறுநெறுநெறெனவதிர்திசைசெல்லவற்ருக்கடல், குமுறமடமடமடென
நடமிடுமயிலின்வருகுறவள்ளிகற்பாற்புணர், குமரகுருபரமுருகசரவண
வுதையவிற்முகசெல்வனைப்போற்றுதும், சிகரிலபருமிதசிகரகொடுமுடிக
கனவெளிமுகமேள்ளுறத்தாக்கிட, நெடியவெதிரகில்பிரமதருமகிழ்சுரர்கட
ருமலர்சில்லெனப்பூதசொளி, நிலவுமடவியுளதிகபரகதியனைய குறுமுனி
செய்தவத்தாச்சிரம, நிறையுமுயர்தவமுனிவர்செயசெயசெயெனவுலவியக
ல்லசற்பாத்திர,தகரநறவுமிழ்பொதியமலைகுமு தமெனுமருவிகள்கலலெண
ப்பாற்கடல, சரிவதெனவருபொருநைவரநதியருகிவளையுமிழ்வெள்ளைமு
த்தாய்த்திகழ், தாளமணியொடுசகலவளமுளசகரபிரபுடர்கலலுமைமகார்
க்கட, றவழுமலையொலிதவிருமுயர்துறைநகரில்வருமலைவல்லியைக் காக்க
வே. (௪)

## திருமகள்-வேறு.

வளைகாய்ப்புளிமேல்விரும்பாதுமண்பிட்டருந்தாதிளமுலைபின் *
மணிக்கண்கறுத்திடாது திருமழலைச்செவ்வாய்வெளிறாது *
திளையாச்சூற்கொள்ளாதுபசேலென்றநரம்பெழாதுதவஞ் *
செய்துதிருப்பாற்கடல்பயந்ததேசந்தாமரைப்பெண்சரண்பணிவாம *
அளைவாய்மடுத்தகள்வாயுமசோதைதயிர்மத்தெடுத்தடிப்ப *
வாவாவென்றுகுழைபிடித்தேயங்காந்தழுதழுகிற்கிளைய *
பிள்ளைவாக்கிடந்துட்குழைந்தெழுவெண்பிள்ளைமதிவாணுதற்சிறுபெண் *
பிள்ளைபாகம்பிரியாண்மேற்பிள்ளைக்கவிதைதழைக்கவே. (௫)

## கலைமகள்.

குடிவினுறியைப்பிடித்தூரலிற்குந்திக்கால்தைத்தெக்கிமுகங் *
கோட்டிக்கடைக்கண்போட்டிடையர்கும்பத்ததியைக்குடித்துவட்டு *

---

† ஆற்பதொன்பது=ஆல்பதொனமருவியது
குகார்=இருளைநீக்கினவர்

நெடுநீலனுக்கோர்கிளையெனுநெடுநீலிபாகம்பிரியாத *
நிமலிமோகம்பிரியா அகிலைக்குநிறுத்துந்தமிழ்காக்க *
முடிவின்முனையின்முனைக்கழுத்தின்முடித்தபிறைக்கூனிருகோட்டின் *
முனையுஞ்சூலமுதற்றேவரெனத்தான்கவினமுடிகவிக்கும் *
படிகவிறத்திபடிகவட்டம்படிகபடாம்பூம்மைந்தனத்தி *
படிகவருணபதுமகெற்பபரிபூரணத்தியாரதியே. (சு)

## சததமாதர்கள்.

தழையுங்கமுக்கைப்பூவும்பிஞ்சுமதியுங்காயுஞ்சற்பமும்வெண் *
டரங்கமெறிகங்கையெனகனியுந்தரித்தசடிலப்பெம்மான்பாற் *
பழையபுராத்திமாரபாத்திபண்ணம்பணத்திவெண்குணத்தி *
பாகம்பிரியாப்பராசத்திபனுவறழைக்கும்படிகாக்க *
மழலஞ்சிறையோதிமம்விடைமாயூரமுவணமதயானை *
மகிடமலகைமறைவில்வேல்வண்சக்கரம்வச்சிர ‡ மேர்சூல் *
குழையாந்தணியேயுருத்திரையேகுமரிநாராயணியேசற் *
குணவிந்திராயேவராகியேகுலசாமுண்டித்தேவியே. (எ)

## ஆதித்தசந்திரர்.

கம்பமணிம்புரிக்கோட்டுக்கலுழிப்பெருக்காக்கவுட்சுவட்டிற் *
கரைக்குக்களாக்குக்கரைக்குமதங்கடைக்காலுழிப்பெருக்கெடுத்துப் *
பம்புகளிற்றுத்தலைமகனைப்பயந்துசுரந்துமுலைகொடுத்த *
பாகம்பிரியாள்சங்கரனார்பாகம்பிரியாடனைக்காக்க *
வெம்பிரானுக்கிடக்கண்ணேயிடக்கண்ணினுக்குவலக்கண்ணே •
யெழிற்செங்கதிரேவெண்கதிரேயிரவுக்கரசேபகற்கரசே *
மொரம்புபண்டத்தருன்றனேமுன்றனினுக்குப்பின்றனே *
மூளரிகதவமடைப்பவனேமுளரிக்கதவந்திறப்பவனே. (அ)

---

‡ ஏர் — கலப்பைக்குஆகுபெயராயிற்று.
சூலம் — சூலெனக்கடைகுறைந்துநின்றது.

## பச்சைப்பெருமாளையனார்,

வனையுஞ்சந்திரகலைதரித்துமலைகார்முகத்துக்காயெடுத்து *
வளர்ந்தநாகாலயத்திருந்தமகத்தாங்கடவுளிருவருக்குந் *
தனையன்சத்தியசன்னதியன்றவபூரணைபுட்கலையான *
தையன்மருவுபச்சைமுகிலையன்சரணந்துதிசெய்வாம் *
பனகசடிலர்பனகபவுத்திரத்தர்பனகத்திருக்குழையர் *
பனககரகங்கணர்பனகக்கழலர்பனகசருவாங்கர் *
அனகசனகாதிபர்க்குமறையறியத்திருவாய்மலர்ந்தசிவ 0
ஞாகம்பிரியாளருட்பாகம்பிரியாள்கவிதைதழைகவே. (௬)

## வயிரவர்,

கைம்மாத்தருமானைக்கிளையாள்கைம்மாத்தருமானச்சினவக் 0
கடுக்கந்தரத்தர்நச்சினவகைகடுக்கந்தரத்தரிடத்திருந்த 0
வம்மாவம்மாவம்மாவென்றநமாமறைமாதவம்புரியு 0
மரியாள்பாகம்பிரியாண்மேலருமைப்பிள்ளைத்தமிழ்தழையத் 0
தம்மாகிருதியறியாதசகளவடிவாய்த்திகம்பரராய்த் 0
தண்டாயுததாரயினிதரபதத்தாரணத்தராய்ப்பெரிது 0
மிம்மாநிலத்திலிடுபிச்சையேந்துகபாலராயெகினை 0
மேறியெகினமேறியெனத்திரிவாய்கிருபைபுரிவாயே. (௭)

## முப்பத்துமூவர்-வேறு,

சோதிவிட்டுக்குலாவுசூரியவட்டப்பிரகாசத 0
தோகைமுத்துக்குமாரசுவாமியப்பற்குமேனியோர் 0
பாகிபச்சைச்சரீரபாகமிச்சித்தனாய * 0
பசவிகற்பத்தினாறுபாடலிரட்சிக்கவேண்டுமே 0
யாதிவஸ்த்துக்களானவாரணத்துக்குமேலை 0
யாதிபத்தியத்தராயவாகமத்துச்சொரூபமார் *
சீதசொற்கத்துளார்கடேடுமுற்பத்தியாய *
சீவரத்னப்பிரகாசதேவர்முப்பத்துமூவரே. (௰௧)

## காப்புப்பருவமுற்றிற்று,

# செங்கீரைப்பருவம்.

கருமந்தியுங்கருங்கவியும்வெள்ளைப்பெருங்கவியுங்கருங்கரடியுங் [ஞ
கடல்கொண்டெனவதண்டப்படைகொண்டுநடைகொண்டகாகுத்தராகுத்த
னொருமந்திரமநுமன்றன்முனியம்பமண்குயவனொப்பமிடுமொசிபொடும்பச்
சோலையொலியுந்திரையின்வேலையொலியும்பெரிதொலிப்பவைமறைப்பவ
தனல், வருமந்தமுகில்செங்கையமைமையென்றமைப்பமண்மணியோசைபனை
யோசையு, மாறிட்டவன்றைக்குமின்றைகருமாருதியும்வாரிதியும் வாய்பு
தைக்கும், திருமந்திரநகர்வந்தவருமந்தசெல்வியேசெங்கீரையாடியருளே
தேகநீணாகபூணாகனார்பாகமேசெங்கீரையாடியருளே. (௧)

இமையகிரியுதவவருவரிசைமரகதவல்லியெனதுடையவிசையவல்லி
யிமையவர்வணங்கரியவிலகியவணங்கரியவீசுரிபரமேசுரி
யமைபமைபசுந்தோளிலணியரவகங்கணியமிர்தகிருபைபொங்கங்கணி
யருணைமங்கலைகமலையந்தரிநிரந்தரிசிவாகமநிறைந்தசைவ
சமையநெறிசமையவருபீதாம்பரிசதிதருந்தாண்டவாடம்பரி
சரந்தருகணிகுஞ்சரந்தருபெண்ணீர்மையஞ்சக்கரியஞ்சக்கரி
சிமையமுடிவிழனிலவுதிருமந்திரமுறைசெல்விசெங்கீரையாடியருளே
தேகநீணாகபூணாகனார்பாகமேசெங்கீரையாடியருளே. (௨)

வேறு.

இருமந்தரகிரிநிகர்பைந்தனமசைந்தாலந்தோசீ
றிடையிங்கிறுமிறுமிறுமென்றரிபெய்சிலம்போர்பண்பாட
மருவுங்குழைவீழியுருவஞ்சனவிழியிரண்டாம்வண்டாட
மலரங்கையுனதடிகும்பிடவும்மகிழ்ந்தேவந்தார்பார
தருமந்தழையவெவ்வுயிருந்தழையவிரிந்தாரும்பூமி
சகளங்களுமுளவளமுந்தழையவளஞ்சேருந்தேவ
திருமந்திரநகர்வருமந்தரியுமைசெங்கோசெங்கீரை
சிவசங்கரர்புணர்சிவசங்கரிபராசெங்கோசெங்கீரை. (௩)

உலகந்தழையுமெவ்வுயிருந்திரிபுரையிங்கோவங்கோநீ
யுளதொன்றிடவுயாபதினெண்கணமுதலுன்கோலங்காண
விலகுஞ்சதுர்மறையவனுங்குலிசனுமண்டானுண்டானு
மெவருஞ்சயசயவெனவுன்சந்நிதிநிறைந்தேகின்றூர்பா
ரலகம்பெனவிருபுறமுமபுரளவலசந்தாடுந்தோடு
மடருமபடைவிழியுருவங்குமுதநறுமபூமின்போலார்
திலகந்தருமுகமலர்மந்திரவுமைசெங்கோசெங்கீரை
சிவசங்கரர்புணர்சிவசங்கரிபலாசெங்கோசெங்கீரை. (௬)

வேறு.

சத்தசமுத்திரமொத்துமிகுத்ததடாகங்கணபணசேடன்சிகைகிழுஞ் சூரிய
ன்போலே, சக்கரவட்டமெனக்கதிர்விட்டொளிதாவுஞ்சரவணவாசம்பெறு
தேவென்றீசன்றூனே, முத்திகொடுக்கமறுக்கமுளைத்திடுமூடென்றெழின்ம
கவானுட்பருளாரர்வந்தேகொண்டாட, முக்கணருக்குமறைப்பிரணவப் பெர
ருண்மோசங்கெடவுபதேசஞ்செய்துபூவின்பால்வந்தாய்நீ, யர்த்த முறைத்
திலைமுட்டனெனப்பிரமாவின்திருமுடிமே லஞ்சிடவோரஞ்சாறெஞ்சாதே,
யாத்ததிருக்கைவழக்கமளித்துலகாதியந்தமும்வலமாகும்பவுரிகொண்டாடு
ந்தேவ, சித்திரமபிற்பரிவைத்தபரப்பிரமதீபந்தனையருள்கூரங்கனையேசெங்
கோசெங்கீரை, செப்பருமுத்தொடுதத்துசிறுத்திரைசேர்மந்திரமுறைபாக
ம்பிரியாள்செங்கோசெங்கீரை. (௭)

வேறு.

வயன்மண்டலத்தொடுவரூங்கரியமேதிதாழ்மடுவூடுமழக்கவெடிபோய்
வாளைகமுகம்பாளையம்பூவிரித்திரண்மழைத்துவலைப்பிற்சிதறமைப்
புயன்மண்டலத்தூடுவெள்ளிதுள்ளிப்புகுவபோலக்கிழிததுமேற்போய்ப்
பொழியுமழைவெள்ளப்பெருக்கிற்செருக்கிப்புரண்டெழுகயற்பிரகாசங்
கயன்மண்டலத்திலுக்கயன்மண்டலத்திலொருகயன்மண்டலந்தானெனக்
கருந்துகில்பொதிந்திட்டமின்மினியெனத்திகழ்கடற்றிரைமுகட்டிலுதையம்

செயுமண்டலாதித்தவரிகர்மந்திரமுறைசெல்விசெங்கீரையாடியருளே
தெரியாதசிவனிடம்பிரியாதபாகமேசெங்கீரையாடியருளே. (௬)

எங்கணுநிறைந்தருணவிளவெயிலெறிக்கும்பிறைமையாசலமனைக்கிழத்தி
பிச்சித்தெடுத்துமுகம்வைத்துச்சிமோந்தருமையிட்டுமடிமீதிருத்திச்
சங்கையொடுபட்டாடைமடிநனைத்திடமஞ்சனம்பொலிந்தொளிர்குங்குமச்
சாந்தந்திமிர்ந்துடனலங்கிட்டுநெற்றியிற்சாத்துவெண்ணீறுதொட்டிட்
டங்கயற்கண்ணுக்குமையிட்டுமெட்டில்சருவாங்கபூடணமுமிட்டோ
ரணிதிலகக்காப்புமிட்டணிகளபபைந்தனத்தமுதூட்டியன்புபூட்டிச் [ளே
செங்கையந்தொட்டில்வைத்தாட்டுமொருபெண்பிள்ளை செங்கீரையாடியரு
தெரியாதசிவனிடம்பிரியாதபாகமேசெங்கீரையாடியருளே. (௭)

அத்தம்பலத்திரிபுரத்தொன்றிலுறைவாணனைம்முகக்குடமுழாவு
மச்சுதனிடக்கையுநாளவட்டதனலர்தாளவட்டமுமிரட்டச்
சத்தம்பலத்திக்கொலிப்பக்கடக்கையாழ்தும்புருவும்நாரதனுமோர்
சத்தசுரமொத்திசைப்பத்திரிபுராந்தகத்தாண்டவாடம்பரனெடும
பத்தம்பலத்தினிற்படுபாதியாமம்பலத்தினின்மிகுத்தபூசா
பலத்தைதப்படைத்துநால்வேதத்தினுக்குமுன்னம்பலம்பொன்னம்பலச்
சிற்றம்பலத்திலெதிர்வாதாடிவிளையாடிசெங்கீரையாடியருளே
தெரியாதசிவனிடம்பிரியாதபாகமேசெங்கீரையாடியருளே. (௮)

பாதமெல்லணிச்சமலராடவதிசீதளப்பச்சிளங்கதலியாடப்
பச்சிளநரம்பிறவிலையாடவளைதங்குபசசையிளமூங்கிலாடத்
தாதளவுபரிமளக்கரந்தோடசைந்துமாந்தளிராடவணிபூடணத்
தாலியமபடைதழூவுசங்கரசமந்தமணிராகிளங்கமுகமாடக்
கோதிலாதலருமிதழிலவாடவெண்டளவுகுமுதமலர்கூடவாடக்
குமிழாடவள்ளையங்கொடியாடநீடுகொப்புங்குழையுமாடமீறு
சீதளசெழுந்திலகசெங்கமலமாடநீசெங்கீரையாடியருளே
தெரியாதசிவனிடம்பிரியாதபாகமேசெங்கீரையாடியருளே. (௯)

கயத்தம்பமாமகரசாகரப்பிரளயங்களாகத்தும்பத்தகும்பிக்
கம்பித்தெழும்பித்தரங்கமோடக்கணபணாடவிப்பாம்பாடநின்
மயத்தம்பமூகண்டகோளமாடப்புவனவட்டமாடத்தரணிசூழ்
வட்டப்பொருப்பாடமற்றைப்பொருப்பாடமண்டலாதியநதமாடப்
புயத்தம்பமாகுணப்பூடணமுமாடப்பூராந்தகன்கூடியாடப்
பூங்கயிலையாடவிமையாசலமுமாடநீள்பூச்சக்கரவாளமாடச்
செயத்தம்பமேருகிரியாடவிளையாடுநீசெங்கீரையாடியருளே
தெரியாதசிவனிடம்பிரியாதபாகமேசெங்கீரையாடியருளே. (௰)

செங்கீரைப்பருவமுற்றிற்று.



## தாலப்பருவம்.



முந்தைரகுபதியடிபரவியமணிமுடிவருணனும்வந்தான்
மூவுலகுஞ்செலும்வாயுவுமவந்தான்முக்கணர்துணைவந்தா
னிந்திரன்வந்தானங்கியும்வந்தான்யமனிருதியும்வந்தா
னெழுதிக்கிறைவருமொருமொருதிக்கிலையென்றிங்கேவந்தார்கா
ணந்தணியுமகுழைநம்பர்சடைப்பிறைகாப்பண்மணிப்படமா
நாகந்தலைவைத்தெனவொருகொம்பினடுத்கைதடக்கையிடுந்
தந்திபயந்தருண்மந்திரலந்தரிதாலோதாலேலோ
சங்கரசம்பொருபங்கமரம்பிகைதாலோதாலேலோ. (௧)

பைந்தார்தங்கியசொருகமைகுழலிபைஞ்சிறைமயினிழலி
பதிவிரதகருணீமரகதவருணீயானலமனையகணீ
தொந்தார்வாகைச்சூலினிமாலினிகோமளையாமளைசற்
குணமிகுதாஞ்சகிவஞ்சகியென்றேகும்பிடுவார்கண்முனே

வந்தாநந்தக்காட்சிகொடுத்து நல்வாகனமாதிப்புமா
மணியணிபூட்டணவாதியுகாடொறும்வர்த்திக்கும்பவுசுஞ்
சந்தானந்தானுந்தருமம்பிகைதாலோதாலேலோ
சங்கரசம்பொருமங்கமரம்பிகைதாலோதாலேலோ. (௨)

கந்தனையுதவுங்கற்பகமேகற்பகமேபொற்பகமே
கனியேயினியகரும்பேகொம்பேகருணாலயமயமே
பந்தனவெண்பாற்கடலமுதேமுப்பாலேலவடிதேனே
பச்சிளமயிலேபச்சைக்கொடியேபச்சையிளம்பிடியே
வந்தனைகூறுங்கோமேதகமேமணிவயிடூரியமே
மரகதமேநல்வலம்புரிமுத்தேமாணிக்கக்கொத்தே
சந்தனமேபைந்தனமேமனமேதாலோதாலேலோ
சங்கரசம்பொருபங்கமரம்பிகைதாலோதாலேலோ. (௩)

வேறு.

அஞ்சுகரப்பிள்ளையாறுதலைப்பிள்ளையாணேபேருமே
யந்தவயிற்றையோர்போதுயிரப்பிடிலால்போல்வாடாதோ
பஞ்சமுனக்கெனயாரமுலைக்குடமோபாலாறுமே
மண்டியசித்தமுதாலெனைவெற்பிறைபாரார்பாராரோ
கஞ்சமலர்க்கணனுமுகத்தன்மகாவானுடானோர்
கண்கள்களித்திடவேதரிசித்தவர்காணுமேனேருநீ
தஞ்சமெனச்சொலிமேனைவளர்த்தவடாலோதாலேலோ
சங்கரர்பக்கலில்வாழ்பசலைப்பிள்ளை தாலோதாலேலோ. (௪)

வேறு.

மண்டமர்முப்புரமுன்புசிரித்திடமாறுமாறேவேள்
வந்தசிறப்பெதிர்கண்படவெற்றுருவாமாறேகூர்வேர்
கண்டுசிரித்திடினுஞ்சரீரத்தளிர்கார்போலோயாமே
கண்படமற்றவர்சிந்தைநினைத்தெனவேதோமாலோக

முண்டுபெடிப்படிகொஞ்சிலுனக்கொர்கணேறேநாவேற்று
வொன்றுமிலைத்தினமின்சொல்படிப்பினைபேசாய்பேசாயோ
தண்டரளத்திருமந்திரநகர்க்கொருதாயேதாலேலோ
சங்கரர்பக்கலிருந்தகிளிப்பிள்ளைதாலோதாலேலோ. (ரு)

உன்கைசுவைப்பதுகொங்கைசுரப்புறுபால்போலுறுதோ
வுண்டிசுருக்கியபண்டிபசித்தழின்மேனுதேவியா
மின்கவலைப்படுமென்பதுசற்றுமெணுதேபோவானேன்
விம்பவிகழ்க்கனிகம்பிதமிட்டெதிர்பேசாய்பேசாயோ
முன்கமலத்தனையுந்திபடைத்தமுனேனுலேகாணு
முண்டகபொற்பதமுன்பதபொற்பெனவோகாதீநால்வே
தன்கையெடுத்தெதிர்கும்பிடுதற்பளாதாலோதாலேலோ
சங்கரர்பக்கலிருந்தகிளிப்பிள்ளைதாலோதாலேலோ. (௬)

வேறு

பாரம்புயங்கச்சதுர்ப்புயனும்பவளநயனப்பங்கயனும்
பௌததிரகரகத்தெண்கயனும்பருமத்தடக்கைவெண்கயனு
மாரும்பவளத்திதழ்க்கனிவாயரசேதிருவாய்மலர்வாயென்
றருத்தியிருத்தியுரைத்தனர்நீயஞ்சொற்குதலைமொழியாயோ
ஆரும்பனிரண்டருக்கருமற்றுளவச்சுவினியிருவருமபத்
தொருவருருத்திரகடவுளருமுதிக்குமட்டவசுக்களொடுந்
தேருந்திருமந்திரநகரச்செல்வீதாலோதாலேலோ
சிவனோர்பாகம்பிரியாதசெல்வீதாலோதாலேலோ. (எ)

காதுக்கினிதுன்மழலையஞ்சொற்கண்ணுக்கினிதுன்காட்சியின்பங்
கனிவாய்க்கினிதாய்க்கவுணெரித்துக்கன்னந்தனைமுத்துவதின்பம்
வேதச்சொரூபியுன்னைமடிமேல்வைத்திருப்பதுடற்கின்ப
மெச்சியுனதுச்சியைமோந்துவியத்தனுசிக்கினிதின்பம

பேதைக்கினியம்பொறிக்கின்பம்பிள்ளைக்கனியன்றியுமுண்டோ
பெரியவிமயக்கிரியருள்பெண்பிள்ளாய்குதலைவிள்ளாயோ
சீதக்காயாம்பூவருணைச்செல்வீ தாலோதாலேலோ
சிவனோர்பாகம்பிரியாதசெல்வீ தாலோதாலேலோ. (அ)

வேறு.

செங்காவித்தடமுங்கமலத்தடமுங்குமுதத்தடமுஞ்
சேலுநீஞ்சிறுகாலூடுந்திகழ்தேரார்தெருவூடும்
பொங்காடரவந்தம்பநுளைச்சியர்புகுசிறுகுடிலூடும்
புட்டிலினூடுங்கட்டிலினூடும்புளினத்திடரூடுங்
கங்கூடுங்கடலூடுங்கப்பலினூடுந்திரையூடுஞ்
சுழிசுழியூடுங்கன்னிகைமார்காலூடுங்கரமூடுஞ்
சங்கூடாடுமந்திரநகராய்தாலோதாலேலோ
சங்கரசம்பொருபங்கமரம்பிகைதாலோதாலேலோ (௯)

தெண்டிரைகொஞ்சுதடங்கரைதனிலுந்தேசிகர்தங்கைமடிச்
சீலையிலுங்காசுப்பையிலுங்கற்பயிலுங்குப்பையிலு
மண்டபமாளிகையிலுமனைவளைமதிறனிலும்
வழிதனிலுஞ்சிறுகுழிதனிலும்புன்மணறருகிணறினிலும்
பண்டசாலையினும்பரமங்கையர்கொங்கையினுங்கையினும்
பணியணிபவளத்திடையினும்வாசற்படியினுமுடியினும்வெண்
டண்டரளந்திகழ்மந்திரநகராய்தாலோதாலேலோ
சங்கரசம்பொருபங்கமரம்பிகைதாலோதாலேலோ. (௰)

தாலப்பருவமுற்றிற்று.

# சப்பாணிப்பருவம்



எத்திசைசலவாக்குமிறைபெற்றமகுடக்குடுமியிமையாசலக்குரிசிற
மிதயகமலங்களிசிறப்பவுங்கற்புடையிலக்கணவிளக்கமான
சித்திரவிகர்த்தசொரூபப்பருவவிற்புருவதிலகமதிமுகமேனையுந்
திருமனங்குளிரவுங்கண்குளிரவும்பதுமசெந்திருமனங்குளிரவு
முத்திளநகைச்சனகிகர்த்தனமையச்சொனமுகூர்த்தநல்விசேடத்திருண்
மூதண்டகோளமுஞ்சந்திரசூரியருமறைமொழியுமொருநிலைதவறினுந்
தத்தியகட்டிறிளைமுழக்காநகர்க்கிறைவிசப்பாணிகொட்டியருளே
சங்கரேசுரர்வாமபாகமேபாகமேசப்பாணிகொட்டியருளே (க)

இட்டகலநெல்லல்லமுக்குறுணிநெல்லல்லவிருநாழிநெற்கொண்டுசிற்
றெறும்புகடையானைமுதலெண்பத்துநான்குநூறாயிரஞ்சீவனுக்கு
மட்டகலமுட்டாதுமுப்பத்திரண்டறம்வளர்த்துமிச்சம்பிடித்து
மாலையிட்டுக்கைப்பிடித்தவென்னையற்குமணவறைப்பந்தலின்கீழ்க்
கட்டுகம்பற்றுமிருகால்கூப்பிநின்றுமேகலைக்கலையொதுக்கிவெட்கிக்
கடைக்கணிட்டுத்தலைகவிழ்ந்துட்குழைந்துமுன்கைச்சரிசிலம்பப்புதுச்
சட்டுகம்பற்றியமுதிட்டசெங்கைகொடொருசப்பாணிகொட்டியருளே
சங்கரேசுரர்வாமபாகமேபாகமேசப்பாணிகொட்டியருளே. (உ)

மலையெடுத்துக்குடையெனக்கவித்துச்சொரிகன்மாரியுந்தாங்குபூவை [ர்
வண்ணனைக்கமலமலர்க்கண்ணனைப்பெரிது § தம்மையனெனவுவர்தையலா
சிலைபிடித்திடுநுதற்றிருமுகத்திலகசிவகாமியபிராமிவாமி
செல்விமலைவல்லிகுலதெய்வமெனநல்லவுணாசெய்திதழினல்லவில்வ
விலையெடுத்தறுகெடுத்தலொடுத்தர்ச்சித்துமிச்சித்தும்வர்ச்சித்திடா
வெக்காலுமூக்காலுனைக்காறுதித்தேயிருப்போர்தனைப்பூவின்மேற்
றலையெடுத்திடவநுக்கிரகம்வைத்தருள்சத்திசப்பாணிகொட்டியருளே
சங்கரேசுரர்வாமபாகமேபாகமேசப்பாணிகொட்டியருளே. (ந)

---

§ தம்மையனென — மகரம்விரிந்துநின்றது,

அகலமுறுபூச்சககரவாளகிரிமுழுதுமுனதாலயப்பத்தியுடுவி
னூதியந்தமுமுனதுணைபந்தனத்தணியுமுத்தாரமாலிகைவிளங்கு
பகலவனுமமுதகதிரவனுமுனதுபையபைங்குழையணிசூதம்பை
பாரவட்டப்பொருப்பயத்தனையுமுன்கையிம்மங்தொடுகளங்கம்மனை
செகதலச்சேடனும்வாசுகியுமுன்கையிற்சிலலரிப்பண்சிலம்பெத்
தேசகாலமுமழிவிலாவஸ்த்துவானபிரசித்தியேசிவசத்தியே
சகலகலைவல்லியேயிமையமலைவல்லியேசப்பாணிகொட்டியருளே.
சங்கரேசுரர்வாமபாகமேபாகமேசப்பாணிகொட்டியருளே. (௮)

கன்னலம்பாகெனப்பாலெனத்தேனெனக்கடவுளர்கடைந்தவின்பாற்
கடலிற்பிறந்தநற்றெள்ளமுதென்னவண்கவிதைபொழிகவிவாணரிற்
றேன்முறைத்தன்மைத்தொண்டனென்றுந்தொண்டரிற்கொத்தொட்டி
மையென்றுங், தொண்டரிற்கொத்தொட்டிமைத்திறத்திறபெயர் சுமந்தநற்
குடியிதென்றும், பின்னமில்லாதநம்பேர்க்குடிதனிற்பிள்ளை பிள்ளைதலைமு
றைநமக்குப், பெற்றிசேர்சுந்நிதியில்வித்துவானென்றுமேன் பேர்சொல்லி
யழைத்துத்திருச், சன்னதிதனிற்குடியிருத்திரச்சித்ததாய் சப்பாணிகொ
ட்டியருளே, சங்கரேசுரர்வாமபாகமேபாகமேசப்பாணிகொட்டியருளே. ()

வேறு.

மரகதவருணனுமருமறைவருணனுமத்தளைத்தாளம்
வரன்முறைசுருதியிறைவிசெயவிகசிதபற்பமலர்த்தேவி
யிருவருமருவுகின்னரமிசைபயிலமுருக்கமலர்ப்போலு
மிரதியுமகியொடுபரிதியுமகிழ்வரநிர்த்தமிடத்தானே
பரகதியுனதுசன்னிதியெனவிமையவர்பட்டுவிரித்தார்கள்
பதிவிரதம்முளமகளிர்கள்குரவைமுழக்கினரிப்போது
குணாகடறிணாதவிர்துறைநகருறையுமைகொட்டுகசப்பாணி
குமரனையுதவியதமருக்கரதலிகொட்டுகசப்பாணி. (௯)

வேறு.

சறுவமுழுது஬ஞ்சிவமயமெனவுஞ்சத்திபடைத்தாலே
சகலமுனிவருமபெறுமலகணுவுஞ்சற்றசையப்போமோ
கிறுபைசெய்திடிலிங்கறமொடுபொருளிற்பத்திரட்டபாது
கெதியுனதடியென்றுயர்கதியவருங்கெச்சிதமிட்டார்கண்
முறைமுறைபுகலும்பரதமுன்மொழியுஞ்சச்சபுடத்தாள
முதலறுமுனதங்கையிலனவரதஞ்செப்புவதெப்போதுங்
குறைவறுவளமந்திரநகருறைமின்சொட்டுகசப்பாணி
குழையொருவிழியம்பிகையனவரதங்கொட்டுகசப்பாணி. (எ)

வேறு.

வானம்பிரியாத்தேவலோகந்தனிலாத்தானகற்பகாடவிக்குளரசாய்
வாழிந்திரனார்க்கெழினனந்தகன்மேற்றூன்வெட்டானதிக்கிலுறைவோர்
ஞானம்பிரியாத்தூயபாதந்தலைமேற்சூடிநற்றூயெனச்சுருதியா
ஞலங்கமும்வாய்ப்பாடமாய்வந்தனையார்த்தார்கள்சற்றேகடைக்கணருள்பார் [ம்]
சேனைபிரியாச்சூல்பேரம்பலகூத்தாப்ரசித்தாவெனக்கருணைமா
றேடும்பொருளாய்த் தேவர்பாடும்பொருளாய்ப்பாரவெற்பாலயக்கயிலைவா
தாணபிரியாததேவர்பாகம்பிரியாத்தேவிசப்பாணிகொட்டியருளே [ளே
தாய்வந்ததுபோற் பேதைபால்வந்தருளார்த்தார்கை சப்பாணிகொட்டியரு

வேறு.

சொந்தமாயெனையாள்சிருபாலியேசூலியேதொத்தார்மலர்க்குழலியே
தங்கமுழுவாலைமாலினிமனோன்மணியானசொற்காதிபத்தியமயிலே
சிந்துரானனயோதசிலரைவேலனைச்சேயெனவளித்தவனசே
செங்கையாலறமோரொணுலுமெண்மேலுமேசெட்டாய்வளர்த்தவமுதே
கந்தமார்கயிலாசவாசமேநேசமேகற்பாலயக்கனகமே
கஞ்சநான்முகன்மாயனருமேகூறுமேசத்தாரசப்பிரமமே
சந்திரசேகரநீலசோலமேடோலமேசப்பாணிகொட்டியருளே
சங்கரேசுரர்வாமபாகமேபாகமேசப்பாணிகொட்டியருளே. (௯)

### வேறு.

இருசெங்கையுமுலாவுகட்கஞ்சரிகலீரெனத்தானமுழக்கமிகவே
பில்கைம்படையுமார்புதுவளுஞ்சவடியூடிரத்னதியிட்டொளிரவே
ஒருசெங்கயல்குலாவிவருரண்டுகுழையூடுபொற்றோடுமொத்தசையவே
புயமும்பொனரிமாலைசிறுகொண்டையும்விலாசகோப்போடுசுட்டிபொரவே
வருசெம்பொன்மலைராசனிதயங்களிகொளமேனைமட்டாமிலக்குமிலதாய்
மகிழ்வுமபெருகநீதணளியும்பெருகநீடுவச்சிராயுதத்தன்மூடிதாழ்
தருசங்கரசுவாமிதமணங்கரசுவாமிசப்பாணிகொட்டியருளே
தருமந்திரமதானதிருமந்திரகல்யாணிசப்பாணிகொட்டியருளே. (௰)

### சப்பாணிப்பருவமுற்றும்.



## முத்தப்பருவம்.



மக்கட்கெளிதாய்ச்சொலற்கரிதாய்மகத்தாய்ச்செகத்தாங்க்கபிடேகம்
வைத்தமகுடக்கயிலாசவளாக்கேகிடைக்கும்வல்துவாய்ப்
பக்கத்திருக்குநீயேனுமோர்பசுங்கொம்பிடத்தின்றிமற்றோர்
பசுங்கொம்பிடத்துப்பூம்பிஞ்சாய்ப்பசுங்காயாகித்தூங்காது
செக்கச்சிவந்தவிழிக்கருணைத்தேனூற்றிருந்துகனிகனிந்து
சிந்தித்திருக்குமடியர்சிந்தைதித்தித்திருக்கும்படிபழுத்த
முக்கட்கனிக்குமோகனமாமுத்தேமுத்தந்தருகவே
முழுமாமறைதேர்பாகமேமுத்தேமுத்தந்தருகவே. (க)

வெருக்கொண்டினதுகுழற்குடைந்துவில்லும்பொழியுமம்பினொடும்
விண்மேற்செல்லுங்கொண்மூவின்விளைமுத்தமுமுண்டுன்கழுத்தின்
னுருகொண்டிருக்கப்பயந்துகடலொளிக்குமவளைமுத்துண்டுனதாட்
குடைந்தமாதுமமுத்தமுண்டுனுடையதடந்தோட்கொதுங்கிவனத்

திருக்குங்கிளைக்கு முத்தமுண்டுநிலைசொற்கிடைந்துவேலியையிட்
டிருக்குங்கழைக்கு முத்தமுண்டுசெங்கெங்களுமூத்துண்டிதழ்வாய்
மூருக்கமலர்க்குளிருக்குமுத்தமுண்டோமுததந்தருக்வே
முழுமாமறைதேர்பாகமேமுத்தேமுத்தந்தருகவே. (௨)

தத்துந்தரங்கமுழங்காவுஞ்சந்திரானச்சமுத்திரமுதநந்
தனக்குத்தரநேர்வடிவாணியுண்மைக்காணிசிவப்பாணி
குத்துண்கழுநீரிருப்புக்குட்கழிப்புக்கழிப்புக்கையேறல்
குறுகலாணிக்குறுகல்வளைகழிவுகூறுகல்செந்நீர்சப்
பத்திசமதாயக்கழிவுசமதாயம்பார்சக்குவெள்ளை
பருவண்டியிலேதரம்பிரிப்பர்பாறுவதிநின்செங்கனிவாய்
முத்தந்தனக்குத்தரம்பிரிக்கமுற்றுமுத்தந்தருகவே
முழுமாமறைதேர்பாகமேமுத்தேமுத்தந்தருகவே. (௩)

நத்துநிலவுசலஞ்சலநாகணவாய்படைத்தவலம்புரிநல்
கியமுத்தினுக்குவிலையுண்டுநாஇளம்பூம்பாளைமுருக்கவிழ்பூ
கத்தின்மிடற்றினிடத்தபழுக்காய்முத்தினுக்குவிலையுண்டுபூங்
கழைமுத்தினுக்குவிலையுண்டுசெண்முத்தினுக்குவிலையுண்டோர்
மெத்தமுகின்முத்தினுக்குவிலையுண்டுகமலவிகசிதப்பூ
விளைமுத்தினுக்குவிலையுண்டுவிரும்பியெவரும்விலைமதியா
முத்தமுனதுசெங்கனிவாய்முத்தேமுத்தந்தருகவே
முழுமாமறைதேர்பாகமேமுத்தேமுத்தந்தருகவே. [௪]

பலர்ககாவோங்குமவானத்தேமறுகூடொதுங்கும்வானத்தே
மறைபேசுமூத்தராசியேமணல்வீசுமுத்தராசியே
நிலைவீடருகுங்கற்பகமேநெறிவிட்டிருக்குங்கற்பகமே
நியமாபகருமந்திரமேநிலவுநகரமந்திரமே

இலக்காரியசங்காரன்சகியேயெழுதாவேதரஞ்சகியே
யெனையாண்டருளுஞ்சங்கரியேயிமையோர்வணங்குஞ்சக்கரியே
மூலக்கோமளையேயாமளையேமுறுவன்முத்தந்தருகவே
முழுமாமறைதேர்பாகமேமுத்தேமுத்தந்தருகவே. [௫]

மதிமண்டலநேர்மனைகளெல்லாமாடகூடவும்பரிக்கை
மணிவில்விரவிக்கிடப்பதெல்லாம்வயங்குங்கதிர்வெண்டரளமணி
யெதிர்சொல்லாவொவ்வொருவர்கள்பாக்கியந்தேவேந்திரபாக்கியம்வாழ்ந்
திருந்ததிக்குமகளிரெல்லாமருந்ததிக்குநிகர்மகளிர்
கதிர்போல்வழங்குகாசும்வெள்ளிக்காசுந்தங்கக்காசுமுற்றுங்
கையாற்றெளிக்குநீருங்கமகமெனக்கமழ்பன்னீர்வளமை
முதிர்மந்திரமாநகர்வாழ்வேமுறுவன்முத்தந்தருகவே
முழுமாமறைதேர்பாகமேமுத்தேமுத்தந்தருகவே. [௬]

வேறு.

ததிகுடிக்குந்திருமுகிற்குஞ்சதுர்முகற்குங்கருதுமோர்
சதுர்மறைக்குங்கனிமுதற்சங்கரிடத்தன்புடையபார்
பதிகளிக்கும்பதிவிரதைப்பெண்பணிலமொய்க்குங்கரையிலே
படர்சிறுந்தெண்டிரைகடற்றண்பதியின்முகதென்றுரைசெய்தே
துதிசெயச்சிந்தையைநினைத்துந்தொழுமவர்க்கம்புவியிலே
சுகமளித்திங்கநுபவிக்குந்துறைகொடுத்துஞ்சரணமே
கெதியெனத்தந்தருடொப்பெண்கிருபைமுத்தந்தருகவே
கிளிமொழிப்பங்கயமுகப்பைங்கௌரிமுத்தந்தருகவே. [௭]

தெரியுமுத்துஞ்சொரியினத்துந்திரியுமுப்பின்கடலிலே
சிகரவெற்பின்றரளநிச்சந்தழன்மடுக்குங்குழலிலே
கரியமைக்கொண்டலில்விளக்குங்ககனமுத்தங்கருகலே
கழையின்முத்தங்கரடுமுத்தங்கமலமுத்தந்திருகலே

பரிமித்திண்கரிமருப்பின்பரியமுத்தஞ்சரவையே
பவளமுத்தெங்குளதிதழ்ச்செம்பவளமுத்திங்கருமையே
இரியளிக்குஞ்சிறுதுளைப்பெண்கிருபைமுத்தந்தருகவே
இளிமொழிப்பங்கயமுகப்பைங்கெவுரிமுத்தந்தருகவே. [அ]

வேறு.

கழையிலுங்கழையிலுற்கண்பட்டமுத்தைக்கடைக்கணிட்டும்பார்க்கிலோங்
கார்வண்ணரகுபதிகரததாலமைத்தவிக்கடலகட்டியங்கிமுக்தும் [வோ]
விழைவுமேருங்குப்பையிலொதுக்குவோங்காலான்மிதித்துத்தூவைத்து வரு
மிதிபட்டமுத்தினைத்தொட்டிட்டசெங்கையும்விளக்குவோம்பன்னிளைவிட்
டெழுமுழக்கவுண்மதத்தயிராவதப்பூணிருப்பிடமருப்பின்முத்து
மெத்தனைக்குள்ளேயெனமதிப்போம்பின்னையெந்தமுத்தினைமதிப்போந்
தழைமலர்த்தொடைச்சொருக்கணிகுழற்பாகமேதவளநகைமுத்தமருளே
தாரமலைமுத்தர்புணர்தாரமலைமுத்தமேதவளநகைமுத்தமருளே. (௯)

மேலைத்தவத்தர்க்கிருப்பிடமெனுஞ்சொற்கவிட்டினிலுமுத்தமில்லை
வேழத்தினுக்குமுனைநீடுமிருமேகொடுதொறும்வெண்டரளமுத்தமில்லைச்
சேலுற்பவித்தமைக்கெற்போதரத்தேழுதிரைகடலுமுத்தமில்லைச்
செந்நெற்கதிர்தொறுங்கன்னற்கணுத்தொறுந்தேயத்தின்முத்தமில்லைப்
பாலொத்தசெந்தமிழ்ப்பிள்ளைக்கவிக்குளோன்பதுநிலமுமுத்தமிலலைப்
பானிலாவுமிழ்வெண்மணற்றிடரினெய்தற்பரப்புப்பொருப்பாகுமித்
தாலத்தின்முத்துண்டுன்வாய்முத்துமுண்டுநீதவளநகைமுத்தமருளே
தாரமலைமுத்தர்புணர்தாரமலைமுத்தமேதவளநகைமுத்தமருளே. (௧0)

முத்தப்பருவமுற்றிற்று.





# வருகைப்பருவம்.

கணிலுங்காண க்கிட்டாவக்கனாக்குக்கனாக்குச்செலப்பிரளயக்
கட்டாய்த்தரங்கஞ்சுருட்டியமைக்கடலிற்கிடக்குங்கப்பல்பட
கணியம்பிடித்தகம்பாகமதனிற்பிணித்துவிட்டனங்கூ
ரத்தைமகரமிரையெனவாயதக்கியிழுப்பக்கலங்துரப்போர்
தனியுந்தடத்துட்டடக்கரிதந்தடக்கைபிடித்துக்கராமிழுப்பச்
சலித்திட்டழைக்குங்குரலெனச்சத்திக்கபயமென்றேலமிடும்
பணிலங்களைபோய்த்திரியுமக்திரப்பதிமாகிதிமான்வருகவே
பாகம்பிரியாள்சங்கரனூர்பாகம்பிரியாள்வருகவே. (க)

மச்சத்துனையாவிரத்தொரொட்டுமோற்றுமேருப்பொருப்பாகி
மற்றைப்பொருப்புமடங்குமிமவான்கைக்கடங்காமார்படங்காக்
கச்சுக்கடங்காக்கனத்ததனங்கனிவாய்க்கடங்காமற்றொர்மூலக்
காம்பைக்கரந்தாளொருடிபணிக்கடைவாயிருபாலொழுக்கியபான்
மிச்சிற்பெருகிச்சயிக்கியமா மின்னுந்தளிர்ப்பூந்துகினனைப்ப
விளையாட்டயர்ந்துமேனைமடிமேல்வீற்றிருந்துமுலைகுடிக்கும்
பச்சைக்குழந்தைப்பருவமந்திரப்பதிமாகிதிமான்வருகவே
பாகம்பிரியாள்சங்கரனூர்பாகம்பிரியாள்வருகவே. (உ)

காதுதடவும்விழியுங்கமகமெனக்கமழுங்குமிழுமிதழ்க்
கவிருந்தவிராவதனசந்திரகாந்தியணங்குன்றிருமேனிச்
சோதியெழுந்துகொழுந்துவிட்டுத்துடர்ந்துபடர்ந்துநடந்துலகைச்
சுற்றும்புணரிமுற்றும்வளர்ந்தோங்கிப்பரந்தகடன்மடுக்குஞ்
சாதியெழுமாமுகிலுமுகிற்றூணாமழைவீழகலமகி
தலமும்பச்சைப்படுத்திவிஷ்ணுசருவாங்கமுங்கொண்டையர்ப்டுப்
பாதிசரீரத்தினும்படர்ந்தபச்சைக்குழந்தாய்வருகவே
பாகம்பிரியாள்சங்கரனூர்பாகம்பிரியாள்வருகவே. (ந)

மேகஞ்சுரந்துபரந்தன்னமேனிக்கொடுஞ்சூர்க்குலமிடுக்கண்
விளக்கவெறிமத்தெதிர்தயிரின்வெருவிக்கயிலைப்பொருப்பினரு
காகநிறைந்தென்னையாவுன்னபயமபயமபயமெனு
மமரர்க்கிரங்கியபயத்தமளித்தைம்முகத்தோடதோமுகமுந்
தேகமாறுமாய்ப்பிறந்துசிறந்துசரவணையிற்கிடந்த [டைப்]
சிறுவன்றனைச்சென்றெடுத்தொன்றாய்ச் சேர்த்துமுலைப்பால் கொடுத்துவி
யாகன்கரத்திலளித்தமந்திரப்பதிபாநிதிமான்வருகவே
பாகம்பிரியாள்சங்கரனார்பாகம்பிரியாள்வருகவே. (௪)

வாயிற்புவனவட்டமிட்டுமடுத்தும்பசிறுநிறையாமல்
வைத்தபாலுந்தயிருநெய்யுமருட்டுந்திருட்டுக்குணம்படைத்துக்
கோயிற்சிறப்பென்றுயர்சிறுகுடியிற்சிறந்தோங்கருச்சுணத்துக்
கூடுதவழ்ந்துவிழிகடொறுங்குடிகொண்டிருந்தோரடிச்சம்பிர
தாயத்தொடுபூவளந்துநின்றுதமிழ்ப்பின்னடந்துமதகரிநேர்ந்
தழைக்கச்சக்கரமெடுத்தோடிச்சதத்தினாறுமுடிபடைத்த
பாயிற்சிவனேயெனக்கிடந்தபரனுக்கிளையாள்வருகவே
பாகம்பிரியாள்சங்கரனார்பாகம்பிரியாள்வருகவே. (௫)

யோக்கியசிவக்கியானச்சுடரினொன்றாய்வியாபித்தவள்வருக
யோகதியானமௌனிகடம்முள்ளத்திருக்குமுமைவருக
வாக்குமூலகத்தறம்வளர்த்தவன்னைவருகமணிச்சதங்கை
யம்பொற்சிலம்புபுலம்பவசைந்தாடிவருகவென்னைமதுர
வாக்கியெனவுண்டாக்கிடென்பாமாலையடிசூடினள்வருக
மாலையடிசூடினவரத்தால்வங்கிசபாரம்பரியபுத்திர
பாக்கியமெனக்குத்தரவருகப்பவுசுந்தருகவருகவே
பாகம்பிரியாள்சங்கரனார்பாகம்பிரியாள்வருகவே. (௬)

வச்சிரக் கூதம்பையிடவருகமணிக்கொப்பணியவருகவுச்சி
மகுடமணிமாம்பழக்கொண்டையணியவருகமணிவணன்றங்
கச்சிவருகதிருவரைஞாண்கட்டவருக்கைக்குரத்நக்
கடகமிடுகவருகதிருக்கழுத்துக்கணியாபரணாதி
செச்சைபுனையவருகமுலைத்திருப்பால்பருகியிடவருக
செங்காவியங்கட்கஞ்சனமுந்தீட்டவருகவிமையகிரிப்
பச்சைப்பசலைப்பெண்வருகபாதஞ்சேப்பவருகவே.
பாகம்பிரியாளசங்கரனார்பாகம்பிரியாள்வருகவே. (எ)

கெண்டைக்கணைக்காற்கிறுகிடக்கிண்கிணியுஞ்சிலம்புமினிப்பூட்டேன்
கிண்ணத்தமுதமூட்டேன்சங்கெடுத்துப்பிடித்துப்பால்புகட்டேன்
கண்டசரமுமைம்படையுங்கட்டேன்ரத்நக்கடகமிடேன்
கண்ணுக்கெழுதஞ்சனந்தொடேன்கமலமுகம்பார்த்தினிப்பகரேன்
கொண்டைக்கிணங்கச்சுடிகைபிடேன்குமிழ்மூக்கினுக்குத்தழுக்கணியேன்
கொடுங்கையணைத்துமுலைகொடேன்கொப்புங்குழையுங்குழைக்கணியேன்
பண்டைச்சதுர்மாமறைக்குமெட்டாப்பச்சைக்குழந்தாய்வருகவே.
பாகம்பிரியாள்சங்கரனார்பாகம்பிரியாள்வருகவே. (அ)

செய்யபவளச்செழுங்கொத்தேமுத்தேசிவரத்நமே
சிந்தாமணியேமரகதமேதிகழும்வயிடூரியமணியே
துய்யபதுமராகமேசுடர்விட்டொளிர்கோமேதகமே
சோதிவயிரமேநீலச்சுடர்விட்டெறிக்குமிளமணியே
சைவமணியேபெண்மணியேதயங்குமினியபொன்மணியே
தாயேவருகவருகவென்றூற்சதங்கைசிலம்பப்புலம்பவென்முன்
பையநடந்துவராதபராமுகமேன்வருகவருகவே
பாகம்பிரியாள்சங்கரனார்பாகம்பிரியாள்வருகவே. (கூ)

வேறு.

மரகதவருணன்வடிவுடையிளமையமலைமகள்வருகவருகவே
மதர்விழிமகரகுழைவிழியுருவமயிலியல்வருகவருகவே
சுரர்முதன்முனிவர்முடிமிசையிருகைதொழுதனர்வருகவருகவே
துடியிடைதுவளமணியணிமகுடசுடர்விடவருகவருகவே
பரிபுரசரணவிகசிதகமலபகவதிவருகவருகவே
பருபதவரசிமகிழ்வுறவுலாசெய்பணிமொழிவருகவருகவே
திரிபுரைகௌரிபயிரவிகுமரிதினகரிவருகவருகவே
திரையொலிதவிருமுததிபினகரிதிருவுளமகிழவருகவே. (௰)

வருகைப்பருவமுற்றிற்று.

=<>0+0<>=

# அம்புலிப்பருவம்.

பாகமென்னும்படியிருப்பைநீயிவளையும்பாகமெனவேயுரைப்பார்
பாலலமுனக்குங்கைவாரமிவளுக்குமேபானலங்கைவாரமாம்
நாகபூணர்க்குரித்தாகுநீயிவளுமோநாகபூணர்க்குரித்தா
நற்கலைநிரம்பிநிற்குமுனக்கிவளுக்குநற்கலைநிரம்பிநிற்கு
மேகமாய்நீயுமலையிற்பிறந்தாயிவளுமேமலையிற்பிறந்தா
ளிருவர்குணமுங்குறியுமொன்றிவளுடன்சரியிருந்துவிளையாடலாமே
யாகமமியம்புதிருமந்திரநகரம்பிகையோடம்புலீயாடவரவே
யழியாதம்பொருள்பாகம்பிரியாதகௌரியுடனம்புலீயாடவரவே. (௧)

உலோகாதியந்தமும்விளைந்தவுததிப்பிரளயமுண்டெழுமுகிற்பரந்த
வுறுபுனறதும்பிளம்பாசடையும்வெண்முகில்செம்முகில்விரிந்தநுரையு

மேகோபமித்தெழுந்திடையிடைமறிந்தமீன்கணமெலாமீன்கணமு மங்
கெங்கெங்குமுகம்வைத்தகங்கையங்காலுமீதண்டபித்திகைகூலமும்
வாசாயிருந்தபுயலென்னும்வண்டுதமகரந்தபரிவேடமிட்டு
வாசப்பிரகாசம்வீசப்பிரசவமுதகலைவார்ந்தொழுகவாய்ந்தலர்ந்த
வாகாயவாவியம்புயமென்றழைத்தவளோடம்புலியாடவரவே
யழியாதபொருள்பாகம்பிரியாதகௌரியுடனம்புலியாடவரவே. (உ)

பூச்சக்கிரவட்டத்தெறித்தபதினறுகலைபூத்திருப்பனவுனக்குப்
பூச்சக்கரவட்டசட்கோணமுக்கோணம்பொருந்தெணெண் கலையிவட்கு
மாச்சறப்பிறப்புடனிறப்பும்வளர்வுந்தேய்வுமதிதோறும்வருமுனக்கு
மட்டிலக்கற்றதொருகற்பகாலமுமாய்விலாக்கர்த்தவியமிவட்குப்
பேச்சுக்கடங்காதவொருகணஞ்சூழ்ந்தேபிரகாசித்திடுமுனக்குப்
பேரண்டபதினெண்கணங்களுஞ்சூழ்ந்துமேபின்செலுமிவட்குமந்திரத்
தாச்சிகருநீதாழ்ச்சியல்லவோவலியவந்தம்புலியாடவரவே
யழியாதபொருள்பாகம்பிரியாதகௌரியுடனம்புலியாடவரவே. (ங)

உதையமனமத்தமண்மெனரண்டுமன்மூண்டுனக்கிவட்கேகமனமே
யுன்னுடையவுள்ளங்களங்கமுண்டிவளுளத்தொருகளங்கமுமில்லையால்
சிதையுமுன்மானநிலைநில்லாதிவட்கூச்சிதைந்திடாநிற்குமானந்
தேய்ந்துமாய்ந்திடுமெய்யுனக்கிவட்கெத்தேசகாலமுந்தேயவில்லையா[ப்ப]
விதையமகிழ்சிவனிடஞ்சேர்ந்துசடைவாயுறவுமிவள்சேர்ந்துவாழ்ந்திரு
விரவுக்குநீபுறப்படுவையிவளுலகெலாமீன்றினிதிரட்சைபுரிவ
ளதிகமிவளாகையாலுன்னையுமிரட்சிப்பளம்புலியாடவரவே
யழியாதபொருள்பாகம்பிரியாதகௌரியுடனம்புலியாடவரவே. (ச)

முகமோரிரண்டுமூன்றுடையெம்பிரான்சடைமுடிக்கிடைகிடந்தநச்சு
மூச்சுவிட்டுடலொளிமுடவுட்படச்சிகையின்மூதராவென்னகெருடா
சுகமோவெனக்கேட்டசெய்திநீயறியாதுசொன்னபாசுரமல்லவே
தொல்லைமலைபெற்றவெம்பெருமாட்டிமடியில்வந்தினிதாகவிளையாடிறைல்

ஜெகமேழுமொக்கச்சுமக்கும்பணாடவிச்சேடனுக்கொப்பமைக்குஞ்
சிகாரத்தராகுத்தனைத்தட்டிவினவவுஞ்சித்துவருனக்குண்டுவா
னகழுடுதாராகணத்தூடுவிளையாடுமம்புலியாடவரவே
யழியாதபொருள்பாகம்பிரியாதகௌரியுடனம்புலியாடவரவே (ரு)

கைம்முகடுமட்டுமணவிட்டவெண்சுதைமாட மணிவேயிலெறித்தலாலும் [ம்
வண்டலிடுவெண்மணற்கிடையிடைகிடந்து மணிமுத்தொளிவிரித்தலாலு
பொம்மெனமுழக்கம்பெருங்கயத்தலையிற்புரண்டலையிலாவிக்கனை
புக்கிடம்புரிவலம்புரிதினஞ்சொரிநித்திலப்பிரபைபுகுதலாலு
மிம்மந்திரத்திருநகர்க்கெல்லியும்பகலுமிவையென்றுணாக்கவரிதா
லிங்குவந்தாலுனக்குள்ளகளங்கமுதலில்லைக்களங்கமணுகா
வம்மைதன்சந்நிதானம்பெற்றிருந்துநீயம்புலியாடவரவே
யழியாதபொருள்பாகம்பிரியாதகௌரியுடனம்புலியாடவரவே. (சு)

பெரும்புவனவட்டம்வளைபூச்சக்கிரவாளப்பிறங்கலினடங்குமண்டப்
பித்திகையுமெத்திசையுமுத்திசைபடுத்திப்புறப்படுசெலப்பிரபாகக்
கருங்கடலையுந்தன்வாய்திறவாதவண்ணம்வாய்சட்டுமந்திரமிவடருக்
கைவந்ததுன்றனக்கையுறவில்லாதபடிகண்காணவொப்பிக்கவோ
விருந்தவூர்க்கடலையுந்தெறகொடுவடக்குமோர்யோசனைவிலாசநீள
மென்றும்வாய்திறவாமல்வாய்கட்டிவிட்டதாலென்றும்வாய்திறவாதுனை
யருந்துமிராகுத்தனையும்வாய்கட்டிவிடுவேணியம்புலியாடவரவே
யழியாதபொருள்பாகம்பிரியாதகௌரியுடனம்புலியாடவரவே. (எ)

மிருகாபதிச்சிங்கவேறெனத்தக்கனையும்வீழ்க்கிடீசிரமரிந்து
வேழ்வினையழித்ததிகவிக்கினேசுரர்தொந்திமேல்வயிற்றைக்கிழித்துப்
பருவாரமுற்கடவுளைக்கரமொடித்துதையபரிதியைப்பற்றகர்த்துப்
பாதத்திறலுன்னையுந்தேய்த்தாணவீரபத்திரன்மிகுத்தெழுசினங்

திருகாவழற்பொறிதெறிப்பக்குறித்தகீழ்த்திசைநோக்கிவண்டுறுக்கித்
திருமந்திரரகசியத்தலத்தினுக்காட்சிதேவாலயத்தீசானதிக்
கருகாகவாயுத்தமாய்நின்றதறிகிலாயம்புலீயாடவரவெ
யழியாதபொருள்பாகம்பிரியாதகௌரீயுடனம்புலீயாடவரவே. (அ)

மழைத்தடங்கொடுமுடிமணிக்ககனமுகடுருவமந்தரநிறுத்திநெற்றி
மட்டச்சிகாரத்நப்பட்டத்துநெட்டேடல்வாசுகிதனைப்பிடித்துக்
குழைத்துப்பிணித்துத்தடத்திருப்பாற்கடற்குண்டகழியகடுடைபடக்
குழைத்துத்திருத்திடுந்திமிலகுமிலத்துனைக்கூடக்கலக்கிவாட்டுங்
தழைத்ததுளவப்படலைமின்னுசொர்ணப்படாந்தாங்குபங்கயலோசனன்
றங்கைகண்டாயவன்சற்றேயறிந்தாற்சகிக்கலனைவலக்கைநீட்டி
யழைத்தவுடன்வந்தாற்பிழைத்தனைபிழைத்தனைநீயம்புலீயாடவரவே
யழியாதபொருள்பாகம்பிரியாதகௌரியுடனம்புலீயாடவரவே. (கூ)

முடிக்கணபணச்சிகைமணித்தலையினெட்டுடன்மூடக்கிப்படுத்தபகுவாய்
மூதாரவுன்னைக்கடுப்படவடுப்படமுழுவதும்விழுங்கிவிட்டாற்
குடிகைகிற்குடித்திடுஞ்சொப்பிளிக்கிற்கொப்பிளித்திடுமதற்குவாயிற்
குள்ளகப்பட்டதண்ணீர்விடந்தலையினிற்கொள்ளாதிருக்கமந்திரம்
படிக்கக்கருத்துன்னுளத்தடைத்தாலிருப்பதுமந்திரபீடமிவள்பாற்
படிமந்திரமிந்தப்பதிக்கலான்மற்றைப்பதிக்குமந்திரமில்லையால்
அடைக்கலமெனச்சொலிலுனக்குமோர்டுக்கணிலையம்புலீயாடவரவே
யழியாதபொருள்பாகம்பிரியாதகௌரியுடனம்புலீயாடவரவே. (ய)

அம்புலிப்பருவமுற்றிற்று.



# அம்மானைப்பருவம்.

வெம்புலியுமெண்குமடன்மேவுகடுவாயொடிமடங்கலுமடங்கலேறு
மிருகாதிநாகாதியுகுதாதுகாப்பதூஉம்விரதமெனவனவரசமும்
பைம்புலிசிமிழ்கறிக்கும்படியிரக்கினைபடைத்துப்பிறங்குஞானப்
பைஞ்சுடரெறிக்குமிமையாசலமனைக்குரியபன்னிதுடைமஞ்சுநீங்கி
யும்யவிபழங்கபந்தலையும்விளையாடிமுன்னுலாவியநிலாவின்முற்றத்
துல்லாசமாசவுன்னுதயமண்டலமிழிக்கொக்கவேவிளையாடுதற்
கம்புலீவாவென்றழைத்தகைசிவப்பநீயம்மானையாடியருளே
யம்மானையறியாதபெண்ணுனபாகமேயம்மானையாடியருளே, (௧)

டொய்ம்மானையம்மானேர்பொன்மானெனப்பூம்பொகுட்டுறைபிராட்டிகாட்
டப், போர்புரிதடக்கைதனில்வார்சிலையெடுத்துப்பினேகுவோன்றூளாவார்
க்கு, விம்மானையெத்துந்தியங்கமலத்தற்போதயசதுர்மறைத்திருமுகத்
தெழில்காட்டுபரமேட்டிமறைநெறிவழாமலேயிருமணச்சடங்கியற்றக்
கைம்மானைவைத்துநின்கைப்பிடித்திட்டநங்கண்ணுதற்பெம்மானைநீ
கல்யாணப்பந்தரின்மணக்கோலமெல்லக்கடைக்கணின்மகிழ்ந்துநோக்கு
மம்மானையருடம்விழியம்மானையிடைதுவளவம்மானையாடியருளே
யம்மானையறியாதபெண்ணுனபாகமேயம்மானையாடியருளே. (௨)

பிடிக்குமணியம்மனையெடுத்தெறியும்விசையிற்பிறங்குதாரகணத்தைப்
பிடுங்கித்தடங்கணமுகடெட்டித்திரும்பித்தடங்கைக்கடங்கு
முடிக்குழலிதம்மனைவிதுயர்வதிதுதாழ்வதிதுதிர்வதெனத்தெளிவுறு
தொககப்பிடித்திருந்தண்ணார்துவிளையாடவுதிர்பட்டவுடுவம்மனை
யடிக்குட்கிடப்பதனைமுத்தொடுபொறுக்கியம்பங்கேருகத்தணங்கும்
படிகத்துருப்படுமணக்குமம்படாமுலைப்பாரத்தணைத்தருகுமின்

றடிக்கடியெடுத்துக்கைநீட்டவவதானமாயம்மானையாடியருளே
யம்மானையறியாதபெண்ணுனபாகமேயம்மானையாடியருளே, (௩)

மட்டானதில்லாதபூச்சக்கரவாளமுமற்றப்பெரும்புவனமு
மாதிரமுமேகமுவின்மண்டலாதியந்தமும்வழங்குஞ்சராசரமுநீ
கட்டாய்நடத்தினபடிக்கோடக்குமின்கைபார்த்திருக்குமெவையுங்
கண்ணுதற்பெருமானுநின்னருள்படைத்தலதுகர்த்தவியநடத்துதற்கே
பொட்டாதுன்னுடையசெயலம்மனைகளங்காடிலுன்னிழலுமொக்கவாடு
முலகமுதலாடுநீயாடினுலென்பதற்கொருவரைக்கேட்பதென்றே
வட்டாவதானமாய்க்கட்டாணிமுத்தேபொன்னம்மானையாடியருளே
யம்மானையறியாதபெண்ணுனபாகமேயம்மானையாடியருளே. (௪)

பூட்டுங்கலன்கலின்கலினெனப்பொற்சரிபுலம்பச்சிலம்பலம்பப்
பொருகயற்கண்ணிணைகளாடாமலம்மனைபிடித்தாடுமுன்சித்திரஞ்
சூட்டும்பணுமுடிச்சேடன்சிகாமணிச்சுடிகைதனையாட்டும்வட்டச்
சுற்றுத்திகாந்தபொருப்பெட்டுமொக்கத்துளங்கக்களங்கிஞட்டு
நீட்டுந்தடக்கைப்பொருப்பெட்டுமுட்டுநாணிலவலயமுற்றுமாட்டு
நீற்றொளிபழுத்தழகெறிக்குமென்னையனிலாத்தவழ்சடாமுடியையு
மாட்டுமுன்செங்கைவித்தாரத்தையாரறிவாரம்மானையாடியருளே
யம்மானையறியாதபெண்ணுனபாகமேயம்மானையாடியருளே. (௫)

முகிலாண்டமண்டலத்தப்பால்விளக்கொளிமுளைத்தனையநட்சத்திர
முறைமுறையெறிந்தவம்மனைவான்முகட்டிற்பதிந்ததெனமாறுமன்றே
ளகிலாண்டசெங்கையை யடைந்திடுமுகிழ்த்தத்தினுற் பெருங்கதிதனிற்
போய, நற்பெரும்பதவியைப்பெற்றுமெய்ஞ்ஞானத்தினுற்கூடொழித்தலே
ய்க்குந், துகிலாண்டகொடியிடைச்சிவகாமியுன்றுணைச்சேவடியடைந்தபே
ரே, சொர்க்கத்திருப்பருன்செங்கையைபடைந்தபேர்சொர்க்கத்திருப்பதரி

தோ, வகிலாண்டவல்லியேயெனையாண்டசெல்வியேயம்மானையாடியருளே
யழுமானையறியாதபெண்ணானபாகமேயம்மானையாடியருளே. (௬)

வேறு.

சாடுந்தரங்கமிரங்கியசத்தசமுத்திரமுவட்டெறியத்
தலையுறுமண்டலமிட்டெழுசெட்டெல்சறுவமுமண்டலமிட்
டுடுபிலத்தினொழித்திடும்விடமுடவுட்படசேடனைநீ
டுச்சிபிளக்கப்பற்றிவளைத்தலகுதறிக்கதறமுறித்
தீடுசெலுத்திக்கக்குமிரத்தமெடுக்கக்கொத்தியெடுத்
திருசிறைபட்டதிலண்டகடாகமுமிடிபடமடமடென
வாடுமயிற்பெருமானையளித்தவளாடுகவம்மனையே
யாள்பரமன்மனையாளெனுமெம்மனையாடுகவம்மனையே. (௭)

பாடும்பயிரவிகோடிவராளிபந்துமுகாரிமுதற்
பண்ணுடனேபுன்சங்கிதபாடியபாடினியாரதியோல்
தோடங்குழைநேர்வைத்தமைநல்யாழ்சுருதிசெய்கீர்த்தனமுந்
தோத்திரமுஞ்செயவாத்தியமுமபரதொனிக்கப்பாற்கடலா
மாடந்தனிலுறைமரசதவண்ணனன்மார்பினணங்கரசே
வாதுபுரிந்துபொன்னம்மனையாடிடவம்மினெனச்சென்று
ளாடம்பரியுமைபாகம்பிரியாளாடுகவம்மனையே
யாள்பரமன்மனையாளெனுமெம்மனையாடுகவம்மனையே. (௮)

முதிருலக்குக்குடையாடையெனத்திகழ்மூந்நீரொழுகடலுண்
மோதுதடங்கரையிற்றிரைதத்திமுழக்காமைக்கடலின்
மதியுவமானவிடம்புரியிப்பிவலம்புரிதினம்விளைய
மாசறுதூயமணற்றிடரெங்குமணித்தாளத்திரளுந்
துதிபுரிசுற்றுக்கொவ்வொருயோசனைதூரத்துட்குயவர்
கள்ளையொழிஞ்சர்ச்சரையபளைத்தொகைதுன்றுதலினாலும்

மதிசயமாகியமந்திரநகராயாடுகவம்மனையே
யான்பரமன்மனையாளெனுமெம்மனையாடுகவம்மனையே. (௯)

கரவலையொலியும்புளினத்திடர்படுகம்புளினத்தொலியுங்
கப்பலிடும்படகொப்பமிடும்பலகைத்தறைகட்டொலியுஞ்
சரிவளையோடுவலம்புரியொலியுந்தரளத்தரந்தெரியத்
தட்டியமுத்துப்பெட்டியினொலியுந்தருலோகமுமணவத்
திரையொலிதினசரிசிறிதுமிலாமந்திரநகர்துவளுமிடைச்
சிறியாடடமுலைபெரியாள்கரியாடிருமறைதேடுவதற்
கரியாள்பாகம்பிரியாளுரியாளாடுகவம்மனையே
யாள்பரமன்மனையாளெனுமெம்மனையாடுகவம்மனையே. (௧௦)

அம்மானைப்பருவம்முற்றிற்று.



## நீராடற்பருவம்.

துள்ளும்பொருங்கயலிரண்டருகினும்புரளறணைவிழிப்படையை மானுந்
சுழித்துச்சுழித்துச்சுழிக்குணமுமுந்தியஞ்சுழிபோலுநீரின்வழியே
கொள்ளுங்கருஞ்சைவலக்கொத்திதழ்க்கொருகுகொந்தளப்பந்திநிகருங்
குளிர்நத்துமிழுமுத்துநிலவொத்தழகெறித்தகுமுதகுறுமூரனைருந்
தெள்ளுந்திரைக்கரம்வளைக்கரமெடுத்துனைச்சீக்கிரமழைத்தலைக்குந்
தென்பொதியவணைபெருகுபொருநைமாநதியுநதுசேடியரிலொருவர்பொ
ருவும், வெள்ளஞ்சிலம்புகோடீரர்மனையாட்டிபுதுவெள்ளநீராடியருளே.
விரிவானபொருள்பாகம்பிரியாததேவிபுதுவெள்ளநீராடியருளே. (௧)

வடதிசையிலுயர்சிகரமஞ்சினந்துஞ்சிமையவனாயிடநீபிறந்தாய்
வழுவிலாத்தென்றிசையின்மஞ்சுதுஞ்சிமையமாமலையிடமிவள்பிறந்தாள்
சுடர்விடுஞ்செஞ்சுடரிடம்புகிற்சுத்தக்கறுப்பாயிருப்பைநீயுஞ்
சுடர்விடுஞ்செஞ்சுடரிடம்புகிறசுத்தக்கறுப்பாயிருக்குமிவளு
மிடறங்குமாறுமுகமுந்தோன்றவந்துலகளித்தனைநீயுமிவளு
மிடறங்குமாறுமுகமுந்தோன்றவந்துலகளித்திடுவளாகையாலே
மிடறங்குதாம்பிரபருணியுமுனக்குவமைபுதுவெள்ளநீராடியருளே
விரிவானபொருள்பாகம்பிரியாததேவிபுதுவெள்ளநீராடியருளே. (௨)

தென்னன்றமிழ்க்கும்பகெர்போதபத்தகத்தியர்சாகையாரம்பமாய்த்
தேங்கருவிதூங்குதாம்பிரவருணிமின்னுதிருமுகம்வைத்தவெம்மருங்குஞ்
சன்னலுஞ்செந்நெலுஞ்சாகமும்பூகமுங்கதலியும்பலாவுமாவுங்
கமலமுங்குமுதமுநதளவமுந்துளவமுங்கருதரியமற்றையெல்லா
மன்னையுன்றிருவடிவதென்னவும்பச்சைப்பசேலென்றொழுகெறிக்கு
மாதலானீயிந்நீராடிவிளையாடினலச்சுதனெனச்சொல்பச்சை
மின்னுமேனியுமிகுபச்சையாகும்புதியவெள்ளநீராடியருளே
விரிவானபொருள்பாகம்பிரியாததேவிபுதுவெள்ளநீராடியருளே. (௩)

வளரிளவாலைப்பிராயத்திலேசெம்பொன்மலையனையன்னையாட்டிதன்
மடிமேற்கிடந்துநீசெங்கீரையாடியுண்மகிழ்ந்துவிளையாடுதலினுங்
களபதனபாரஞ்சுமந்தொசிந்திறுமிடைக்கைத்தாயர்பொற்றலையொக்
கலைபிருநதெண்ணொடெண்கலைதெரிந்தம்புலிகாட்டிவிளையாடுதலினு
மளகபாரக்கமலமுகதிலகரளின்மனையாரொனுந்தோழியரொடு
மம்மானைவிளையாடியாடுகலினும்பொருநையாறெனும்பிரபாகநீர்
விளையாடலேயதிகவிளையாடலம்மைபுதுவெள்ளநீராடியருளே
விரிவானபொருள்பாகம்பிரியாததேவிபுதுவெள்ளநீராடியருளே. (௪)

வள்ளஞ்சிறந்தமுலைமார்பிலணியாடுமின்மருங்கின்மேகலையாதாடும்
வராற்கிணைகணைக்காலினிற்றண்டைகிண்கிணிவளைந்தொளிர்சிலம்புமாடு
மள்ளருஞ்சந்தனக்கலவையுங்குங்குமமுமாசத்தினுந்திமிர்ந்த
வங்கத்துமாங்கமும்பிரத்தியாங்கமுங்கூடவாடிவிளையாடுமன்றே
துள்ளும்பசுந்தகட்டாரலுசள்பொருநையந்துறைநீரினீயாடினுற்
சுந்தரக்குழையிற்குதம்பையாடுந்துணைக்கையில்வளைவந்தியாடும்
மெள்ளவேகங்கைநதிதுள்ளவேபொங்குபுதுவெள்ளநீராடியருளே
விரிவானபொருன்பாகம்பிரியாததேவிபுதுவெள்ளநீராடியருளே. (௫)

வேறு,

திகழுந்தாம்பிரபன்னியெனுஞ்செலப்பிரபாகமின்ரா
சிகளுங்கமடராசிகளுந்திரையூடெழுந்துவிளையாட
விகழாப்பொருநைநதியாகிரதிக்குப்பிரதிபிம்பநதி
யிதுவேபுண்ணியவரநதிபார்சகிதுவேபாவநாசமுமென்
றுகளுமீனவவதாரமுங்கூர்மாவதாரமுமா
யொருமித்தெடுத்தச்சுதன்றீர்த்தமாடிவிளையாடுதன்மானப்
புகழுந்திருமங்கிரநகராய்ப்புதுநீராடியருளுகவே
புராரிபாகம்பிரியாதாய்ப்புதுநீராடியருளுகவே. (௬)

உகட்டுஞ்சகட்டையுதைசரணவுகன்பதுமநயனபட
வுரகசயனர்சகோதரியேயுலகீன்றருள்சங்கரியேவான்
முகட்டையணவுபொதியவரைமுடிதாழருவிப்பொருநைபொரு
முகமாச்சக்கரவாளகிரிமுழுதும்வளையுங்கடன்மடுத்த
தகட்டின்பசும்பொன்மலையரசிதங்கக்கொடிகைக்குள்ளாயுன்
றன்னைமுடிமேல்வைத்தணைத்துச்சங்கமுகத்தால்வடித்திடுபால்
புகட்டல்கடுப்பவெழும்பொருநைப்புதுநீராடியருளுகவே
புராரிபாகம்பிரியாதாய்ப்புதுநீராடியருளுகவே. (௭)

தத்தாழ்திரைக்கார்க்கடன்முகட்டுச்சகத்திரகதிர்ச்சூரியோதயமுஞ்
சந்திரோதயமும்விசும்பனைத்துந்தயங்குந்தாராகணராசிக்
கொத்தோதயமுமுதித்தமுகற்குணதிக்குதித்துப்பொதியவரைக்
குடுமிகடக்கும்வரையும்வளங்கொடுக்குந்தாம்பிரபன்னிதனிற்
சுத்தாகிருதித்தேசுடைத்தாய்த்தோன்றும்பிரதிபிம்பமெல்லாந்
தூயநதியிற்றோய்ந்துதோய்ந்தேதாக்கபதவிபெறன்மாணப்
புத்தாரமிர்தப்படிவமேபுதுநீராடியருளுகவே
புராரிபாகம்பிரியாதாய்புதுநீராடியருளுகவே (௮)

வேறு.

காந்தட்செங்கையின்மாந்தளிர்விரல்வெண்கமலப்பெருமாட்டி
ணைவிளாவாகச்செவ்வரிசிதறுண்கண்ணொழுதஞ்சனமுஞ்
சாந்தொடுகுங்குமங்கொடுமேனைத்தாயரணிந்ததுக
ரூனெனவில்லைச்சேர்த்தியவதனநீட்டியசிந்தூரமுங்
கூந்தலிலம்புயமங்கைமுடித்தலர்கொத்துச்சரமும்வளங்
கொண்டிருக்கையும்வண்டலிட்டகிடர்குவிதல்சமமெனப்
பூந்திரைவந்தபிடேகம்புரியப்புதுநீராடுகவே
புவனீஸ்பரியேஜெகதீஸ்பரியேபுதுநீராடுகவே. (௯)

நளிதண்புன்னிறைகடல்கழகடுத்துக்கியமுக்கியெழு
நடுவுயர்முதுகொருகுமடமெனத்திகழ்சமடங்கருவிமிக்
துளிசிந்தியதிரைபுரளுவபிரளயத்தூடுருவித்துருவிச்
சூன்முதிர்வயிறுளையக்குழையக்கரைதோறுங்கரையேறி
வெளிவந்தரிதுதவழ்ந்துதவழ்ந்துகைவெட்டாற்றூழ்குழியாய்
வெட்டியதிற்சொரிமுட்டைகளிட்டதைமீட்டுநிரப்பியவெண்
புளினமெனத்திகழ்திருமந்திரவுமைபுதுநீராடுகவே
புவனீஸ்பரியேஜெகதீஸ்பரியேபுதுநீராடுகவே. (௰)

## நீராடற்பருவமுற்றிற்று

# பொன்னூசற்பருவம்



அண்டமுகடணவுகதிரிளநிலவெறிந்தபடிகக்காலின்மிசைமரகதத்
தாலவிட்டமிட்டதிற்றாளவடநாட்டியதோதாரைமாரியுமிழும்
கொண்டலெனிகர்ப்பநீணிறமணிப்பலகையைக்கொழுவிப்படாம்விரித்துக்
கொழுமலர்பரப்பமளியிற்புகுந்தாடுமுன்கோலமிருகாலுநிலவத்
துண்டவெண்டுணைத்திணுட்பசுந்துளவமாறென்றுவதுமானுமொன்றிற்
றுழாய்முகில்சகோதரியெனப்பின்னுதிக்குமுன்றோற்றமும்பொருவுமருண
புண்டரிகபைஞ்ஞலேயின்மந்திரநகர்வந்தவுமைபொன்னூசலாடியருளே
புனலாடிவிளையாடிபுனைகோலபாகமேபொன்னூசலாடியருளே (௧)

முருகுவிரிமகரந்தமூடிவிளைவுறுநறுமுட்டிமட்டிதழ்விம்மிநாண்
முகைப்பிணிமுருக்கவிழுமம்புயாசனமகுடமுடியணங்கரசிருவரு
மொருங்கினருங்கிருபுறமுநின்றிளந்தென்றன்மண்டுமைபயசாமரையிரட்ட
வுறுவசியரம்பைமேனகைதிலோத்தமையினெய்முயருமிந்திராணிரதியு
மருணகிரணப்பிரபைவிரியக்கருட்பூரவாலத்தியேந்திநிற்ப
வாட்சியுஞ்சந்நியதானம்விழிகொளாதையனதிசெயித்ததிசெயித்துப்
பொருபுனலடக்குஞ்சிரக்கம்பமுஞ்செயப்பொன்னூசலாடியருளே
புனலாடிவிளையாடிவருகோலபாகமேபொன்னூசலாடியருளே. (௨)

கயலமீனமண்டலமுமுத்தணிபடங்கிட்டகல்யாணபந்தரோப்பப்
ககனவெளிமுகடுதொடுபொன்னூசலாடிடக்கட்டுபொற்றட்டாடவே
யயலவண்ணமண்டலம்பூமண்டலாதியந்தரூமுழுதுமாடுமவடா
னசைவாமலனுமுதலுமசையாதுவென்பதற்கையமிலையென்றல்காட்டு
முயல்வண்ணமண்டலமதிச்சடாமணிமகுடமுத்தர்மனையாட்டியெம்மை
முற்றுமாட்சித்தசிமாட்டிகோமாட்டியெம்பெருமாட்டிநம்பிராட்டி [ளே]
புயல்வண்ணனிகர்கண்ணர்துணையென்னையருளன்னை பொன்னூசலாடியரு
புனலாடிவிளையாடிவருகோலபாகமேபொன்னூசலாடியருளே. (௩)

எண்ணரியவிண்ணவரியம்பரியகன்னிகையரம்பையரனந்தகோடி [ப]
யிந்திராணியுருவசிதிலோத்தமைநன்மேனகையோடி யாவருமிறைஞ்சிநிற்
கண்ணரியபொன்னூசலிற்கொழுவுபொற்பலகைநாப்பணவீற்றிருந்த
வட்சேத்திரராசிபுடைசூழநடுவுதையமானகையினிளமதிகடுப்பக்
கண்ணுதலளந்திட்டவிருநாழிநெற்கொண்டுலகைகரித்தலைமகனையும்
கைப்பிள்ளையானசண்முகனையும்வளர்த்தெனுன்கறம்வளர்த்தெனவளர்த்த
புண்ணியபதிசுகுணபதிவிரதகிறைபார்பதிபொன்னூசலாடியருளே
புனலாடிவிளையாடிவருகோலபாகமேபொன்னூசலாடியருளே, (௪)

அக்காரத்தாற்பெரிதுளருபிகரித்தலாலழகியபதச்சுவட்டா
லறிவாகரர்க்கெலாம்வெளியாகியெளிதினுபையததமுந்தோன்றநின்ற
விக்கவிபொருட்கிடம்பெற்றதாற்பாகமென்றெவர்களுமெடுத்தோதலா
லென்பனுவலும்பிரதிவிம்பமிவைசந்தேகமில்லையென்றமிழ்தழைக்கப்
பைக்கணுடவிவிடப்பாந்தளக்குழுவினைப்பாரமணிவலையமேபோப்
பாக்கிமுக்கவரயிற்படைசுமைந்தமைதோட்புறத்தசைந்திட்டகுவிவாய்ப்
பொக்கணவிபூதிபுனைமுக்கணர்மனைக்குரியள்பொன்னூசலாடியருளே
புனலாடிவிளையாடிவருகோலபாகமேபொன்னூசலாடியருளே, (௫)

கயத்தம்பமாமகரசாகரப்பிரளயங்களைததும்பத்ததும்பக்
கட்டமைமரக்கலநடுக்குழிநிறுத்திமன்காலாற்றினிற்பிணித்துச்
செயத்தம்பமென்னத்தொகும்பாய்மரத்தொகுதியுச்சியிற்சேர்ந்துகைதைச்
செங்காலனத்திரள்கள்கம்பமசையுந்தொறுஞ்சிறைவிரித்தசைகுவதெலாம்
சுயத்தம்பமென்னக்கயிற்றுலிதத்தொடுசூழப்பிணித்தகழைமேற்
றாய்பிறக்கஞ்சுகம்போர்த்தவேழம்பர்தந்தொழில்செய்வதேய்க்குமந்தரப்
புயத்தம்புயத்தன்றுதிக்குங்கிருபைக்கரசிபொன்னூசலாடியருளே
புனலாடிவிளையாடிவருகோலபாகமேபொன்னூசலாடியருளே, (௬)

சங்குமிழ்முத்தும்வலம்புரியின்முத்துஞ்சலஞ்சலங்கான்றமுத்துந்
தகடுபடுமிப்பிவாயுமிழ்முத்துமற்றைத்தலத்துள்ளவாடவர்க்கு
மங்கையர்களுக்குங்கழுத்தணியுமாகிநீள்வார்குழைக்கணியுமாகி
மார்பினுக்கரிதினுக்கொத்துமுத்துச்சரமதாகக்கிடந்தடிபடு
மிங்குள்ளவாடவர்கண்மங்கையர்கள்காலினின்மிதிபடுந்துவைபடுமதா
லெத்தேசமுந்தனக்கொப்பிலமந்திரநகரிதனுயிலேவாசமென்றே
பொங்குமறையபிராமிசைலவாமிசிவகாமிபொன்னூசலாடியருளே
புனலாடிவிளையாடிவருகோலபாகமேபொன்னூசலாடியருளே, ௭

வல்லோர்மதித்திடும்வயிடூரியமுண்டுகோமேதகம்புட்பராக
மாணிக்கநீலமரகதமுண்டுவயிரமொடுமுத்துண்டுபவளமுண்டு
சொல்லாலுமடங்காப்பஞ்சலோகமுமுண்டுதூயரசவர்க்கமுண்டு
சுதமாடகூடமுப்பரிகையுண்டெண்ணுன்குசுரிர்தந்தொகுத்தரம்வளர்த்
தெல்லாருமுக்காக்குநீயுண்டெனையனுண்டெழுபனையொடலைதயவரு
மில்லாததன்றிமற்றில்லாததொன்றில்லையெல்லாச்சிறப்புமுண்டு
பொல்லாதவில்லாதமந்திரநகர்வந்தவுமைபொன்னூசலாடியருளே,
புனலாடிவிளையாடிவருகோலபாகமேபொன்னூசலாடியருளே. (அ)

சீரடியங்கபச்சிறடித்தண்டைகிண்கிணிசிலம்பாடநளினத்
திவ்வியபீதாம்பரக்கொய்யசகபுமாடச்சிரோரத்நபணிதியாடத்
தாராடுமேகலாபாரமாடப்பொன்னுத்தரீகவுல்லாசமாடத்
தமனியக்குடமெனத்தனமாடரத்நத்தமைத்தபொற்கச்சுமாட
வோரடமுன்கைவளையூடாடலச்சரத்கிணங்குளைச்சரியுமாட [ப்
விழையுமொருபொன்னூசலென்னவிருகுழையாடவிலகுமதிமுறுவலாட
போராடும்விழியாடவாடாதாடிப்பொன்னூசலாடியருளே,
புனலாடிவிளையாடிவருகோலபாகமேபொன்னூசலாடியருளே, [௯]

சரசுவதியென்மருவினின்றுரைசெய்பிள்ளைத்தமிழ்தழையவழகியதிருச்
சந்நிதானந்தழையமுன்னிதாய்நின்றசிவசங்கரேசுரர்தழையவெண்
டிணைசெயாதென்றும்வாய்பொத்தியமகோததித்தீர்த்தமுந்தழையமகுடச்
சிந்துரச்சுந்தரப்பாண்டியக்களிறொடுசெந்திலானுந்தழையவிண்
டுணைசெயாவேதமுந்தழையச்சிவக்கியானவுற்பத்தியுந்தழையபவே
வுலகமுந்தழையமும்மாரியுந்தழையவெவ்வுயிர்களுந்தழையமதிதோய்
புரிசைதிகழ்மந்திரநகர்வரிசையொடுதழையநீபொன்னூசலாடியருளே
புனலாடிவிளையாடிவருகோலபாகமேபொன்னூசலாடியருளே. (௰

பொன்னூசற்பருவம் முற்றிற்று,

ஆகப்பருவம்பத்துக்குப்பாட்டு ௱)

# பாகம்பிரியாவம்மைபிள்ளைத்தமிழ்

# முற்றிற்று.

ஸ்ரீ-சற்குருவே நமா.





உ

சிவமயம்,

புலவர்குலதிலகராகிய

## சங்கரமூர்த்திப்புலவரவர்கள் சிற்சில சமயங்களிற் செய்தபாடல்கள்

### நேரிசைவெண்பா,

சுப்பிரமணியசுவாமி துணையென்றே
செப்பரியவெத்தூரஞ்சென்றாலு மெப்பொழுதுங்
கூடிவருமென்மேலுங்கூப்பிட்டாலேனேனென்
றோடிவருமவேலுமயிலும்,

தித்திக்கத்தேனுந்தினைமாவுந்தமான்
வர்த்திக்குஞ்செந்தின்மலைவாசன் சித்தம்
மறக்குமோவென்றுமலங்காதேயூட்டிட்
டிறக்குமேவேலுமயிலும். (௨)

கையெடுத்ததெய்வமுனைகாட்டிக்கொடுக்குமோ
செய்யடுத்தசெந்தூரான்சீருனே ஐயையோ
என்றுனைநெஞ்சேயிரங்காதேயோடிவரு
முன்றுணைவேலுமயிலும், (௩)

என்னத்தைச்செந்தூராவென்றாலெமராயன்
பின்னைத்தான்வந்துபிடிப்பானோ கன்னத்தே
போடாதோவிடுபுகுதத்துரத்திக்கொண்
டோடாதோவேலுமயிலும. (௪)

வேலாலேகுத்திவிழத்தாட்டிப்போடுவான்
காலாநீசற்றுங்கருதாதே பாலாழி
மெய்யன்மருகன்விமலன்றிருச்செந்தி
லையனெனையாண்டவன் (௫)

திருச்செந்தில் முருகக்கடவுள் சந்நிதியில் அலங்காரம்பண்ணு நிமித்தந் திரைபோட்டிருக்கச்சீக்கிரமுடியாமற்றாமதித்தபோது தரிசனையின் அவாவுற்றுச்சொன்னது (இதில் திரையற்றுவீழ்ந்தது);

கட்டளைக்கலித்துறை.

வேலுக்குச்சொல்லிமயிலுக்குச்சொல்லிநின்வீரதண்டைக்
காலுக்குச்சொல்லியபையமிட்டேன்பின்கருங்குறப்பெண்
பாலுக்குஞ்சொல்லியழுதுவிட்டேன்முகம்பார்குமரா
மாலுக்குச்சொல்லியமால்யானையுய்ந்தவகையென்னவே.

புளியங்கொப்புறச்சொல்லியது.

வெண்பா.

எப்படியுஞ்செந்தூர்க்கிறைவனேயிப்புளியங்
கொப்பொடியவேண்டுங்குருபரா மைப்படியு
மங்கைக்கிசைந்தமணாளநின்றெய்வானை
கொங்கைக்கிசைந்தகொழுநா.

தென்னைமரத்திற்றேங்காய் நெற்று அறுந்துவிழச்சொல்லியது.

ஆசிரியவிருத்தம்,

ஆங்காரத்தற்சூரர்குலமடங்கப்பொருததிறத்தாலே
யாங்காண்பதும்வடிவேலேயான்பாடுவதும்வடிவேலே
மாங்காய்தந்தாயிலைதந்தாய்வாழைப்பழஞ்சர்க்கரைதந்தாய்
தேங்காய்நெற்றுந்தரவேண்டுஞ்செந்திற்குமரப்பெருமானே,

ஒருநாள் பசிப்பிணியினிமித்தஞ்சொல்லியது,

கட்டளைக்கலித்துறை,

பகரப்படாதபசிதீவிரங்களன்பாட்டிற்சொன்ன
ஙகரப்படலத்துககப்பாற்படலத்தைநான்கண்ணுறு
தகரத்தெழுத்துக்கருகாமெழுத்தவதானஞ்செய்தேன்
சிகரத்துழாய்மணிமான்மருகாசெந்திற்சேவகனே.

## மாசி மகோற்சவத்திற் சொல்லியவாசனக்கவி.

### ஆசிரியவிருத்தம்

பொறிவண்டார்மதுகடப்பன் மாசிவிழாக்கொண்டருளும் புதுமைகேண் மோ, வெறிகொண்டானெனச்சிலர்களெடுத்துரைப்பச்சிலர்தனைவியப்பா யெண்ணி மறுயென்றார்சிலர்தனைத்தகவொன்றூரதுபொறுக்கமாட்டாசைவ ன், குறிகொண்டே குடவரையிற்புகுந்துகொண்டா னிதனையென்னகூறு வோமே.

இலங்கைத்தீவிற்குப்போயெதுபிரயெத்தனஞ்செய்கதிலுமதிரு ம்பவராமலிருந்த கமதுமருமகனுக்கு ரிதுசாந்திமுகூர்த்தம வைத்து அதுகாரியத்துக்கு வந்துசேரும்படி பாடியஃது.

### கட்டளைக்கலித்துறை.

ஆனையனுப்பவென்றேண்ணுதுன்வேலையனுப்புதம்பி
மானையனுப்புன்மயிலையனுப்பென்மருகனைநல்
லோனையனுப்பிநீதானேயழைபபிசெந்தூரமற்றப்
பேனையனுப்பவெண்ணுதேயொண்ணுதிதுபெண்பழியே.

செந்திற்குபோய்த் திருமந்திரநகரத்திற்குத் திரும்புகாலையில் வழிமார்க்கத்தில் மதிகெட்டானில் உஷ்ணந்தாங்கமாட்டாமல மழைபெய்யும்படி பாடியது.

### கட்டளைக்கலித்துறை

வேனலிலே கடு வெய்யிலிலே நில வெக்கையிலே
கானலிலேசெல்லக்கால்பாவுமாவள்ளிக்குன்றைப்பெற்ற
மானலலவேநின்மயிலல்லவேவள்ளிவங்கிஷத்தார்
நானல்லவேகுமராவிந்தவாறுநடப்பதற்கே.

திருமந்திரபுரிச் சிவாலய துஜஸ்தம்பத்திற்றூக்கியிருக்குமணி
யைப்பற்றி யப்பொழுததிகாரம்பண்ணிய இராமநாதபிள்ளையவ
ர்களை முன்னிலையிற் சொல்லியது,

கட்டளைக்கலித்துறை,

இசையானபாகம்பிரியான் றுணைத்தனமென்னசொலவேன்
றிசையாதியந்தம்புகழ்ராமநாததியாகரணை
விசையாநம்மூரில்விசாரிப்பெல்லா முன்றன்மேற்செலுத்தி
யசையாமணிகட்டிக்கொண்டான்கொடிக்கம்பத்தாணியிலே,

மற்றொரு இராமநாதபிள்ளையவர்களிடத்தில சிலவியசனக்குறி
ப்புடன்சொல்லியது,

கட்டளைக்கலித்துறை,

பன்னிருகைச்சுப்பிரமண்யபத்தசனனென்றுமுகம்பார்த்தாயில்லை
தென்றுறைமுக்காணிச்சிவலிங்கமின்னதென்றுமோர்ந்தாயில்லை
மன்னுபுகழ்பெரியதிருவடிராயனபிமானமதித்தாயில்லை
யொன்னுலகையாளவரு இராமநாதேந்திரபரும்புண்ணியவானே,

ஊற்றுமலைநவநீதகிஷ்டிணத்தேவரவர்களிடத்திற்சொல்லியது,

ஆசிரியவிருத்தம்,

தாருதராதரம்பெருகுதனுசுதர ராமாவதாராதீர
மாபதராதரமறியாமனிதர்தராதரமறியமாட்டார்கண்டாய்
கூபதராதரமேவுசிவலமன்னருளவரக்குமாரவீர
தீபதராதரம்பழமையறியுநவநீதகிஷ்டிணசெங்கண்மாலே,

அங்கிபஸ்திரி கெமணம்பண்ணமாட்டேனென்றுசொல்லியது.

தாரத்தைத் தாரமென்பேன்மற்றமாதரைத்தாயென்பேன்
சூரைத்துளைத்தவராணைசொன்னேனென்சுபாவத்தையே

வாயுஉபத்திரவந்தீரச்சொல்லியது,

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சந்தனக்கம்பமுந்திரைகடலின்மார்க்கமாய்ச்சந்நிதியில்வரவில்லையோ *
சப்பாணிமுடமொழியவில்லையோவூமையுஞ்சட்டமாப்பேசவில்லையோ *
அந்தகன்விழிப்பொறிதுலங்கவில்லையோ தீர்த்த மாடியபிராஜகன்னிக் *
கழகுவதனாரம்பமாகவில்லையோபூனையாவிபெற்றுய்யவில்லையோ *
இங்கச்சகத்தைரட்சிக்கவருதெய்வநீயென்றுபொதுவறநம்பினே *
னென்னுதரவாயுவைநிவாரணஞ்செய்வதற்கேலாதிருந்ததென்னே *
சொக்கமாய்நின்னுடையபாதாரவிந்தந்துதிக்குந்தொழும்பனன்றோ *
சூரசங்காரமயூரசெந்தூரில்வாழ்சுப்பிரமணியக்கடவுளே. *

வாயு உபத்திரவந்தீரச்சண்முகக்கடவுள் சாதித்த பிரசாதத்தை
மற்றொருவருக்கனுப்பிய அபராதநீங்கச்சொல்லியது.

வெறுந்திருநீறல்லப் பன்னீரின்பூவும் விபூதியும்வைத் *
துறுந்தருவாய்வந்துதவிச்செய்தாயந்தவுண்மையைநான் *
அறிந்துசெய்தாலுமறியாமற்செய்யினுமந்தக்குற்றம் *
பொறுந்திருவுள்ளத்திரங்குஞ்செந்தூர்வந்தபுண்ணியனே *

தாம்பிரநதியிலிறங்கித் திருச்செந்திற்குப்புக்கபொழுது பிரபா
கம் அதிகரித்தகாலையிற்சொல்லியது.

கட்டளைக்கலித்துறை.

தட்டிர் ✠ வழிநடைச்சாஸ்தாவின்பேர்தரிப்பிருந்தாற்
செட்டியெழுந்திருந்தாற்சேவகனித்தையேன்மறந்து
விட்டீர்நடாம்பில்விடாமற்கைதூக்கிடவேண்டுஞ்சிங்கக்
குட்டிபெரியமகயானைக்குட்டிசகோதரனே,

---

✠ வழிநடைச்சாஸ்தாவென்பது திருச்செந்தூர்ச் சாலைத்தெருவிலெழுந்தருளியிராநின்ற சாஸ்தா சொன்னவண்ணஞ்செய்த பெருமாளுக்கு இடுகுறிப்பெயராகவிருக்கின்றது.

திருமந்திரநகரச்சிவாலயதுஜஸ்தம்பத்திற் கட்டியிருந்த அசை
யாமணி நாக்கறச்சொல்லியது,

நேரிசைவெண்பா.

நானேயடிமையென்றனேகுடிமையென்
றனேயின்பாவலனுமென்னில் ஞானத்
திசையானபாகம்பிரியாள்சமேதா
அசையாமணிநாக்கற.

சபாதுக்கவிராஜர்சகலகலைவல்லவரென்றெழுதியசீட்டுக்கவிக்கு
ஆட்சேபனையாகவெழுதியது,

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்,

மகாராஜராஜஸ்ரீமகுடவர்த்தனரதிசயாசெனமதிக்குநிபுணன்
மந்திரநகர்தன்னிலசையாமணியின்நாக்காவரகவிதைபகரும்விரதன்
செகதலம்புகழ்வீரபாண்டியகவிராஜசெயசிங்கமெழுதியபாசுரந்
தந்துபயிலாதுயர்சபாதுகவிராஜரதிசீக்கரமெதிர்ந்துகாணச்
சகலகலைவல்லபம்பராபாற்கல்லது தரணியிலெவற்குமிலலைச்
சாசுபதி சவுந்தரியலங்காரியிலகங்கெடச்சாய்ந்துமுணரவிலையோ
பசலவற்கொருகவிகையுண்டுதேர்க்கச்சாணிபண்பாயமைத்ததுண்டு
பணிதலைபெருமையிகபராசாதகந்தரும்பலிதமிதுநிசவுசிதமே,

## தனிப்பாடல்

முற்றுப்பெற்றது-

